*Kumaraṉ*

*Āram 7, muttu 35*

*April 24, 1930*

Record no. 313

Reg. No. M. 1823. 16 பக்கங்கள். விலை 0-1-6

# குமரன்

The "KUMARAN" Published Every Thursday.

ஆரம் எ } காரைக்குடி பிரமோதூத-ஹு சித்திரை-மீ கஉ உ வியாழக்கிழமை (24—4—1930.) { முத்து கரு.

போலிச் சரக்கைப்பார்த்து மோசம் போகாதீர்கள்.

அமிர்தாஞ்சனம்

(7)

எல்லா நோய்களுக்கும் திவ்விய ஔஷதம். 40 வருஷ காலமாக இந்தியா முழுவதும் புகழ்பெற்றிருப்பது.

சுதேச கம்பெனிகளில் இன்ஷியூர் செய்யுங்கள்.

பாரத் இன்ஷியூரன்ஸ் கம்பெனி (லிமிடெட்).

ஸ்தாபனம்: 1896] [ஹெட் ஆபீஸ்: லாகூர்.

| | | |
|---|---|---|
| புதிதாக சேர்ந்த புள்ளிகளுக்கு இன்ஷியூரன்ஸ் அளிக்கப்பட்ட தொகை. | 1925-ம் வருஷம் ரூ. 73,00,000<br>1926 ,, ,, 124,00,000<br>1927 ,, ,, 151,00,000 | "பாரத்தில்" ஜனங்கள் அதிகமாய் சேருகிறதின் அத்தாக்ஷி. |

லாபம் :—வருஷம் ஒன்றுக்கு 1000-க்கு இன்ஷியூர் செய்தவர்களுக்கு ரூ. 20 விதம் கொடுக்கப்பட்டுவருகிறது. சுத்த இந்திய நிர்வாகத்திற்குட்பட்டு மென்மேலும் விருத்தியாகிவரும் பழமைபான தேசிய கம்பெனியாகிய "பாரத்தில்" வருஷந்தோறும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் இன்ஷியூர் செய்து அதன் பலனை அடைகிறார்கள். அதுபோல் நீங்களும் எங்கள் கம்பெனியின் ரூல்ஸ்களில் மற்ற கம்பெனி ரூல்ஸ்களைப் பார்க்கில் நாங்கள் அளிக்கும் அனுகூலங்களை கவனித்து இன்ஷியூர் செய்யுங்கள்.

மற்ற விபரங்களுக்கும் எழுதவும்,

V. RAMACHANDRIER, Agent, Pudukotta.
S. GANESAN, Organiser, 46 Kamatchi Josier St. Kumbakonam.
SUBBIA RAJU, of Messrs. SUBBIA BROTHERS, Kottaiyur.
9) ஆபீஸ், மதுரை: —or G. RENGASAMI, Secretary, 13, North Veli Street, Madura.

இனும்! இனும்! இனும்!!

அழகான பொருள்! மலிவான விலை!!

ஒரு அணு தபால் முத்திரை அனுப்புவோருக்கு வாசனை பவுடர் இனுமனுப்பப்படும்

விசேஷ காலங்களில் வெகுமதியளிப்பதற்கும், உடைகளில் உபயோகிப்பதற்கும், ஏற்ற நறுமணம்வீசக் கூடிய உயர்ந்த அசல் பாரிஸ் செண்டுகள், ஜாஸ்மின்,ரோஸ் இரட்டைப்பிள்ளை சீசன், அம்பர்ரோஸ் சென்டேலிய இன்னும் மற்ற ரகங்களும் குறைந்த விலைக்கு

கிடைக்குமிடம்:—

ராம. செ. ராம.

(24) 123, மேல்வீடு முகல்வீதி, இரங்கூன்

பழநி, சி. எம். சாமி,

குருதாம்பர பஸ்பம்.

சகல வியாதிகளுக்கும் கைகண்டது.

தீராத திமிர், குஷ்டம், சூலை, மதமதப்பு, தடிப்பு, பத்து, சொத்தி, ஆறாத குழிப்புண், குறைநோய், ரணங்கள் முதலிய வியாதிகளும் கண்டிப்பாய் தீரும்.

100 வேளை பஸ்பம் விலை ரூ. 50 50 வேளை பஸ்பம் ரூ. 25.

ஏழைகளுக்குப் பதி விலை.

ஏராளமான நற்சாட்சிகளை விவரமான கேட்லாக்கில் பார்க்கலாம்.

வைத்திய ஆசிரியர். சி. மலையப்பசாமி,

நித்தியானந்த வைத்தியசாலை பழநி S, I.

Best copy available

Roja Muthiah Research Library
3rd Cross Road, CPT Campus
Taramani, Chennai 600 113.

இந்தப் புதிய விசேஷங்களைக் கவனியுங்கள்:—

1. பலமான உறை.

2. நீண்ட பட்டன்கள்.

3. நீடித்த ஆயுள்.




# DUNLOP

**THE DUNLOP RUBBER CO. (INDIA) LTD., BRANCHES THROUGHOUT INDIA, IN BURMA AND CEYLON.**

தி டன்லப் ரப்பர் கம்பெனி (இந்தியா) லிமிடெட்.,

கிளைகள்:

இந்தியா முழுவதும், பர்மா ஸிலோன்.

வாரப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. இ-0-0
ஆறு மாதம் க-0-0
பிரதி ஒன்றுக்கு 0-க-௯
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. ௪-0-0

# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே"

மாதப் பதிப்பு.

சந்தா விபரம்.

உள்நாடு வருடம் ஒன்றுக்கு ரூ. க-அ-0
வெளிநாடு வருடம் ஒன்றுக்கு உ-0-0
தைமீ வருடாரம்பம்

"சுதரே உயிர்" "கருணையேதெய்வம்"

## நடுகைப்பாட்டு.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்.

(All Rights Reserved.)

தேவரிற் சிறந்த திருமால் வயலில், நாற்று முடியை அலைத்துக் குலைத்து நட்ட பின்னர் மதுவுண்டு மயங்கிய பள்ளியர் நிலையைக் கவிஞர் பண்புற எழுதிக்காட்டுகின்றார். வடித்த மதுவைக்குடித்து, மயக்கமும் தியக்கமும் அடைந்து, வரம்பிற் பாய்ந்து பரம்பிற் சாய்ந்து, விரிந்த கூந்தலோடும் நெகிழ்ந்த உடையோடும் பழனத்தில் கிடந்த பள்ளியர் கோலத்தை

"கடிக்கும் அரவில்
நடிக்கும் இறைவர்
கஞ்சனுர்க் கொரு நஞ்சனுர்
கடையும் அமுதை
உடையும் திரையில்
காட்டி அண்டருக் கூட்டினுர்
அடிக்குள் அடங்கும்
படிக்கு முதல்வர்
அழகர் முக்கூடல் வயலுளே
ஆடிப்பாடி
நாற்றுமுடியை
அலைத்துக் குலைத்து நடச்செய்தே
வடிக்கு மதுவைக்
குடிக்குமாகி
மயக்கமும் பெருந்தியக்கமும்
வரம்பிற்பாய்ந்து
பரம்பிற் சாய்ந்து
வாட்டமும் முகக் கோட்டமும்
துடிக்கும் இதழைக்
கடிக்கும் எயிறும்
சோர்ந்து விரிந்த கூந்தலும்
தடையும் நெகிழ்ந்த
உடையும் கிடந்த
கிடையும் பாரும் பள்ளீரே"

என்று பள்ளுக் கவிஞர் பண்புற எழுதிப் போந்தார். திருமால் பெயர் அமைந்த திருந்திய நிலத்தின் பெருமையைத் தெள்ளிய தமிழால் எடுத்துரைக்கும் கவிஞரது சொல் நயம் அறிந்து இன்புறத் தக்கதாகும். காளிங்கம் என்னும் கடுநாகத்தின் தலையில்களித்து நடம்புரிந்த கமலக்கண்ணனைக் "கடிக்கும் அரவில் நடிக்கும் இறைவர்" என்று கவிஞர் போற்றிப்புகழ்ந்தார். மாதுலனாகியும் எதிலனாகிய வஞ்சக் கஞ்சனை வலியாற் கொன்ற அஞ்சன வண்ணனை "கஞ்சனுர்க்கு ஒரு நஞ்சனுர்" என்று கவிஞர் நெஞ்சாரப் புகழ்ந்தார். திருப்பாற் கடலில் எழுந்த தெள்ளமுதை அண்டருக்கு அருந்தி அழியாவாழ்வளித்த திருமாலின் பெருமையை நிறைந்த மொழிகளால் நிகழ்த்திப் போந்தார். இன்னும் ஏற்போர்க்கு இல்லையென்னுத மாவலி மன்னனிடம் மூவடி நிலம் பெற்று ஓரடியால் மண்ணையும், மற்ருேரடியால் விண்ணையும், அளந்த நெடுமாலின் பெருமையை "அடிக்குள் அடங்கும் படிக்கு முதல்வர்" என்று அழகுறப் புகழ்ந்துரைத்தார். இத்தகைய அருமை வாய்ந்த அழகனுர் திருவயலில் பள்ளியர் ஆடிப்பாடி நாற்று முடியை அலைத்துக் குலைத்து நட்டார்கள், என்று கவி கூறும் நயம் அறிந்து இன்புறத்தக்கதாகும். இவ்வாறு நட்டுக்கரையேறிய நங்கையர் மெய்வருத்தம் போக்குமாறு மதுவை மாந்தி மகிழ்ந்தார்கள். மதுவின் மயக்கத்தால் தலை சுழன்று நிலை குலைந்து இதழைக் கடித்து உலைந்த உடையும்விரிந்த தலையும் உடையராய்க் கிடந்த பள்ளியர் கோலத்தை பார்ப்போர் மனம் இரங்குமாறு பரிவுடன் எழுதியமைத்த கவிஞரது மொழிகள் பண்புவாய்ந்தனவாம்.

ஃ ஃ ஃ

இன்னும் நீர்வளமும் நிலவளமும் மிகுந்த மருதூர் வயலில் பள்ளியர் கூடி மகிழ்ந்து கும்மியடிக்கும் கோலத்தை

"புங்கவர் தமிழ்ச்
சங்கமேறிய
புலமைத் தலைமை அழகனுர்
பொருணை ஆற்றிணை
பெருகுங் காற்புனல்
பொருத மருதூர் வயலுளே
தங்கள் வேலை
காற்றுக்கும் பள்ளர்
அங்கலாய்க்கும் சோற்றுக்கும்
தாமதப்படவே
மதத் தொன்றைச்
சாட்டிமேட்டிற் கூட்டமாய்
எங்கும் ஆர்ப்பொலி
பொங்கவே அதற்கு
எதிரச் சங்கொலி அதிரவே
இலங்கும் அணிகள்
குலுங்கவே காதில்
இசையும் பணிகள் அசையவே
அங்கும் இங்கும்
செங்கை நீட்டி
அருகியும் சின்ன மருதியும்
அரியாளும் கட்டைப்
பெரியாளும் கும்மி
அடிப்பதைப் பாரும் பள்ளீரே".

என்று பள்ளுக் கவிஞர் எழுதிப்போந்த முறை கற்போர் கருத்தைக் கவர்வதாகும். கண்ணுதற்பெருமான் போரமர்ந்த கழனியின் பெருமையைக் கவிஞர் போற்றும் முறை கண்டுகளிக்கத்தக்கதாகும். பண்ணார்ந்த பைந்தமிழை வளர்க்குமாறு செந்தமிழ்ச் சங்கத்தலைவராயமர்ந்து அருளிய கண்ணுதற் கடவுளை "புங்கவர் தமிழ்ச்சங்க மேறிய புலமைத் தலைமை அழகனுர்" என்று நிறைந்த மொழிகளால் போற்றிப் புகழ்ந்தார். பொதிய மலையிற் பிறக்கும் பொருணையாறு பெருகிப் போந்து மருதூர் அணையில் மோதி மருங்கே யமைந்த வயல்களில் நீர் பெருக்கும் வண்மையைக் கவிஞர் வளமார்ந்தமொழிகளால்எழுதியமைத்தார். இத்தகைய பெருமை வாய்ந்த மருதூர் வயலில் எங்கும் மன்னாது ஆர்ப்பொலி பொங்கிற்றென்றும், கொம்பொலி அதிர்ந்ததென்றும் கவிஞர் அழகுற எழுதிப் போந்தார். இவ் இன்னிசைக்கு ஏற்ற முறையில், அருகியும் மருதியும் அரியாளும் பெரியாளும், அங்கும் இங்கும் செங்கை நீட்டிக் கும்மி அடிக்கும் முறையில் அவர் மேனியில் இலங்கிய அணிகள் குலுங்கின என்றும் காதில் இசைந்த பணிகள் அசைந்தன என்றும் கவிஞர் எழுதி அமைத்த முறை இயற்கை இன்பம் பயப்பதாகும்.

ஃ ஃ ஃ

"கள்ளால் விளைவது காதல்" என்று முன்னோர் அருளிய முறையில் மதுவுண்டு மயங்கிய பள்ளரும் பள்ளியரும் காதலுற்றுக் களிக்கும் கோலம் கண்டு மகிழத்தக்கதாகும்.

"வெள்ளாளைக் கிறை
போற்றுவார் ஒரு
புள்ளாடற்கொடி ஏற்றுவார்
வேதர் பரவும்
பாதவகுண்ட
வீடரான முக்கூடலார்
உள்ளூர்ப் பண்ணை
வயலிலே செந்து
வெள்ளூர்ப் பள்ளி வெயிலியும்
உளக் குடிப் பள்ளி
உடைச்சியும் மேலக்
களக்குடிப் பள்ளி சடைச்சியும்
தள்ளாடிக் கொண்டு
நடச் செய்தே பள்ளர்
தள்ளாடிக் கூட்டமிடச் செய்தே
தையலி மகன்
பொய்யலி கிட்டச்
சாடிப் பெரியான் ஓடிப்போய்
கள்ளால் உத்தர
மீறியே நிலை
கொள்ளாமல் தடுமாறியே
காப்பைக் காட்டென்று
கையைப் பிடிக்கும்
கோப்பைப் பாரும் பள்ளீரே"

என்று மதுவின் வெறியால் சேர்ந்த மயக்கத்தை கவிஞர் நயமுற எழுதியமைத்தார். தேவரும் பரவும் திருமால் வயலில் உளக்குடிப் பள்ளி உடைச்சியும், களக்குடிப் பள்ளி சடைச்சியும், மற்றும் பல பள்ளியரும் நாற்று முடியை நடும்போது கள்ளை கன்றாய் மண்டிய ஓர் பள்ளன் துள்ளிக் குதிக்கின்றான். அவன் சாடிக் கள்ளை நாடிக்குடிப்பவன். ஆதலின் "சாடிப் பெரியான்" என்று சேரியில் பெயர் பெற்றவன்; இம்மதமகன் பொய்யலி, என்னும் பள்ளியின் அருகே போந்து மதுவெறியால் மொழி குழறி நிலை குலைந்து காப்பைக் காட்டென்று அவன் கரத்தைப் பற்றுகின்றான். இவ்வாறு அறிவை மயக்கிக் கண்டோர் நகைக்கும் செயல்களைச் செய்யுமாறு ஊக்கும் கள்ளின் கொடுமையைப் பள்ளாசிரியர் பண்புற எழுதியமைத்தார்.

ஃ ஃ ஃ

இன்னும் மதமயக்கத்தால் அடாத செயல் செய்த மற்றொரு பள்ளனது மனப்பான்மையை,

"சிறு கள்ளேமும்
உறவெக் நயாம்
நீர்த்த முக்கின்ற காத்தவர்
திருமுக் கூடல்
அழகர் பழைய
திருவிளைபாட்டுப் புரவிலே
குறவை அறுதாள்
அடியையும் பள்ளன்
பிறவி உழுத நடியையும்
சுழம்பிற் பரம்பு
நடவிக் காவிட்டு
உழப்பிச் சம்பா நடச் செய்தே
மறுகி மறுகி
சறுவக் குடும்பன்
மச்சினன் கூழைப் பிச்சியை
வா வென்றான்
அவள் போ வென்றாள்
மதிச்சான் பின்பதிச்சப் போய்
நறுகி அறுகம்
கொடியிலே அவன்
தட்டி விழுந்த மட்டிலே
தலையைத் தாங்குறப்
போலவே அவள்
கலையைத் தாங்குறன் பள்ளீரே"

என்று கவிஞர் கூறும் முறை அழகு வாய்ந்ததாகும். ஆதிமூலமே என்றழைத்த அன்பார்ந்த யானையின் அருந்துயர் களைந்து அருள் புரிந்த அழகனுர் திருவயலில் ஓர் குடும்பன் மதுமயக்கத்தால் பிச்சியை மறுகி மறுகி அழைக்கின்றான். அவனது காதல் உரையைக் காதிற் கொள்ளாது பிச்சி மறுக்கின்றாள். பள்ளன் மதுவெறியால் அவளை மதிக்கின்றான். அப்பொழுது பிச்சி பின்னே பதிக்கின்றாள். அறுகின் கொடியில் அடிதட்டிப் படியில் விழுகின்றான். அந்நிலையில் பள்ளியின் தலையைத் தாங்கித் தூக்கும் பள்ளன் அவள் கலையைப் பார்த்து மகிழ்கின்றான் என்று கவிஞர் எழுதிய மொழிகளில் கள்ளினால் விளையும் காமச் சுவை களித்து இலங்கக் காணலாம்.

ஃ ஃ ஃ

இன்னும் காதலாற் கள் கலந்த மனம் கலந்து ஓர் பள்ளனும் பள்ளியும் மதுமறைந்துண்ட மாக்கள் போல உள்ளத் தன்னே மகிழும் கள்ளக் கோலத்தை,

"பத்துத்தலையும்
அரக்கன் சிரமும்
தத்தக்களை ஒங்கேவியே
புருவப்பூவின்
உருவத்தழகர்
பண்ணைக்கள்ளுது நடச்செய்தே
மூத்தக்குடும்பன்
பெற்ற பொத்தான்
மொண்டிச்சோரன் மாறனுர்
மூக்கிதமக்கை
காக்கிகறுப்பி
மூலிக்கிணைய நாவிதன்
மூத்தவளெனும், மூத்தவளையும்
குதிக்கின்றன் அந்தச் சிறுக்கியும்
கூசிப்பார்க்கிறுள்
அதற்கவன் பின்பு
பேசிப்பார்க்கும் ஆசையால்
எத்தத் தனித்து
எதிரிட்டவள் முன்
எர்க்காலைவிட்டு சேர்க்காலே
எடுக்கிறுப் போலே
கிட்டக்கிட்டச் சென்று

குமால் என்ற இடத்திலுள்ள ஒருவகையான தாவரங்கள் பூமி அதிர்ச்சி ஏற்படுவதை உணர்ந்து அவற்றின் இறத்தை மாற்றிக் கொள்கின்றன.

ஃ ஃ ஃ

தென்கடல் தீவுகளில் உலகத்திலேயே பெரிதான ஒருவகை நண்டுகள் இருக்கின்றன. இவை தேங்காயைத் தூக்கி அடித்து உடைத்தும் சில போழ்து தேங்காயை திருகி அவற்றின் கண்கள் மூலமாகத் துவாரம் செய்தும் உள்ளுறையை சாப்பிடுகின்றனவாம்.

ஃ ஃ ஃ

சைபீரியா நாட்டிலுள்ள 'எஸ்கிமோ' என்ற வகுப்பார் அந்நாட்டு குளிரிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக பூமியில் சுரங்கங்கள் செய்து அவற்றில் வீடுகளமைத்து வாழ்கின்றனராம். அவர்கள் வெள்ளைக் கரடியின் தோலை ஆடையாகவும், மீன் கொழுப்பை விளக்கெரிக்கும் எண்ணெயாகவும் உபயோகிக்கின்றார்கள்.

ஃ ஃ ஃ

தென்னமேரிக்காவிலுள்ள சில அநாகரீக ஜாதியார் தம் வீட்டிலுள்ள முதியவர்களைக் கொன்று சாப்பிட்டுவிடுகின்றார்கள். வயதான காரணத்தால் அவர்களுக்கு நன்றாய் ஓடியாடி பிராணிகளை வதைக்க முடியாதென்றும், ஆகவே அவர்கள் கஷ்டப்படாமலிருக்கும் பொருட்டு கொன்று விடுவதே சிறந்த தருமமென்றும் எண்ணப்படுகின்றது.

ஃ ஃ ஃ

பிரசில் தேயத்தில் பசுவின் பால்போன்ற பாலைப் பொழியும் மரங்களும், சீனியைக் கொடுக்கும் வன்தரு நிரைகளும் ஏராளமாய் காணப்படுகின்றன.

ஃ ஃ ஃ

அலஸ்காவிலுள்ள மௌண்ட்மெக்கின்லியிலிருக்கும் ஒருவகைக் கடல் பறவையினத்தில் ஆண்பறவைகள்தான் முட்டையின் மீது உட்கார்ந்து குஞ்சு பொரிதாகும்வரை தாய்போல அருகிலிருந்து காப்பாற்றுகின்றன.

ஃ ஃ ஃ

ஆபிரிக்காவிலுள்ள தீக்குருவிகள் இரை எடுக்கும்போது சில சமயம் இரத்தினக் கற்களையும் கொத்தி விழுங்கி விடுகின்றன. இதனை அறிந்த ஆபிரிக்க வேட்டைக்காரர்கள் தீக்குருவிகளை வேட்டையாடி இரத்தினக் கற்கள் சேர்க்கும் வழக்கத்தைப் பெரிதும் கையாடி வருகின்றார்கள். ஒருவன் ஒரு பறவையின் வயிற்றிலிருந்து ௨0 கற்கள் எடுத்தானாம்.

ஃ ஃ ஃ

ஐஸ்லண்டு, ராண்டர்ஸ் என்னுமிடத்தில் சகூ0 வருடங்கட்குமுன் கட்டிய நகர மண்டபத்தை பெரிதாக்கும் பொருட்டு அக்கட்டிடத்தை உகஜ தூரத்திற்கு நகர்த்தியிருக்கின்றார்கள். அக் கட்டிடம் கூச அடி நீளம் கூக அடி அகலம் ச0 அடி உயரம்.

ஃ ஃ ஃ

தென்னமெரிக்காவிலிருந்து லண்டன் மிருக காட்சிச் சாலைக்கு சில நூதன ஜந்துக்கள் கொண்டுவரப்பட்டிருக்கின்றன. அவற்றில் ௨ அடி உயரமுள்ள மான், ஒருவரும் கண்டிராத பெரிய தவளைகள்,

---

அடுக்கிருன் பாரும்பள்ளியே''

என்று கவிஞர் அமைத்த மொழிகளால் அருளிப் போந்தார். "வாரணம் பொருத மார்பும், வரையினை எடுத்ததோளும் வலியற்று ஒழியுமாறு ஓர் அம்பால் இலங்கை வேந்தனது உயிர்கவர்ந்த அஞ்சன வண்ணனது அணிவயலில் காற்று நட்டுக்களையே பிய நாவி, என்னும் பள்ளியை ஓர் பள்ளன் காதலால் நோக்குகின்றான். இவ்வாறு பள்ளன் நோக்கிய நோக்கை நாவியும் நோக்குகின்றாள். இருவர் கண்ணோக்கும் ஒத்த நிலையில் காதல் பிறக்கின்றது.

"கண்ணொடுகண்ணினை நோக்கொக்கின் [வாய்ச் சொற்கள்
என்ன பயனுமில''

என்று வள்ளுவர் உரைத்தவனாய் மொழியின் நயம் அறியாத பள்ளன் தன்னைக் கண்களால் கனிந்து நோக்கிய பள்ளியோடு பேசிப்பார்க்க ஆசையுறுகின்றான்; தன் வர்க்காலைவிட்டு நோக்காலை எடுக்கச் செல்பவன் போல நாவியின் அருகே நெருங்கும் குடும்பனது காதலை அழகிய முறையில் எழுதியமைத்த கவிஞரது கவித்திறம் அறிந்து மகிழத்தக்கதாகும்.

# பலதிரட்டு.

நீலநிறமான மூட்டையிடும் கோழிகள், வான்கோழிபோன்ற பெரும்பறவைகள் இவை காணப்படுகின்றன.

ஃ ஃ ஃ

ஹங்கேரியில் பூட்ஸ் செய்கிற ஒருவர் பாதத்திற்கு சூடேற்றுவதற்காக ஓர் இயந்திரத்தை கண்டுபிடித்துள்ளார். இதனை பூட்ஸில் அமைத்து பொத்தானை அழுத்தினால் சுமார் கஇ மணிநேரம் உஷ்ணம் கொடுத்துக்கொண்டிருக்கும்.

ஃ ஃ ஃ

மனிதகூரப் பெண் கொசுக்களே கடிக்கின்றன. ஆண் கொசுக்கள் கடியாது செடி கொடிகளை நாடி அவற்றின் இலை பூ காய் முதலியவற்றைக் கடித்து தாவர ஆகாரத்தை உட்கொள்ளுகின்றனவாம்.

ஃ ஃ ஃ

பர்லின் யூனிவர்ஸிடிக் காட்சிச் சாலையில் வளர்த்துவரும் மீன்களுக்கு அங்குள்ள ஓர் ஆசிரியர் எழுத்து வாசிக்கக் கற்றுக் கொடுத்திருக்கின்றாராம். அவைகள் ஆங்கில எழுத்துக்களை அடையாளம் கண்டு அறிந்து கொள்கின்றன.

மனிதன் மனத்திலெழும் யோசனைகளையும், எண்ணங்களையும் புகைப்படம் பிடிக்க நவீன இயந்திரமொன்றைக் கண்டுபிடித்திருக்கின்றார்கள்.

ஃ ஃ ஃ

நான்கு வருஷகாலமாக ஞாபக சக்தியற்று தூங்கிக் கொண்டிருந்த சிக்காகோவிலுள்ள எச். டப்ளியு வார்டு என்பவர் கொஞ்ச நாட்களுக்கு முன்புதான் விழித்திருக்கின்றார். அமெரிக்க ஐக்கியநாட்டுத் தலைவர் பதவிக்கு கூலிட்ஜ் மாறி ஹூவர் வந்திருப்பது அவருக்குத் தெரியாது.

ஃ ஃ ஃ

உணவின்றி நீண்ட காலம் பாம்புகளும் வௌவால்களுந்தான் வாழுமென்று சொல்லப்படுகிறது.

ஃ ஃ ஃ

ஸ்காட்லாந்தைச் சேர்ந்த ஜேம்ஸ்டௌனின் ஜோஸப் மெக்கல்லம் என்பவர் ஒரு அச்சாபீசில் எகூ வருஷம் சேர்ந்தாற்போல் வேலை செய்துவிட்டு சமீபத்தில்தான் விலகினார்.

## பெரு முத்து.

உலகத்திலுள்ள எல்லா முத்துக்களையும் விடச் சிறந்த முத்தொன்றை தற்சமயம் லண்டனுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். அம்முத்து கொட்டைப்பாக்குப் பருமனிருப்பதோடு அதற்கு ஒப்பான அழகிய முத்து வேறு எதையும் கூறுவதற்கில்லை. இது பர்சிய குடாக்கடலில் கிடைத்ததாம். இது ஒன்றரை லட்சம் பெறுமான முடையதெனக் கூறுகிறார்கள். முத்துவியாபாரத்தில் நிபுணர்களாயுள்ளவர்கள் இவ்வளவு பெரிதும் அழகியதுமான முத்தைத் தங்கள் வாழ்நாளில் இதற்கு முன்பு கண்டதேயில்லையெனக் கூறியிருக்கிறார்கள். உலகத்திலேயே இதைவிடச் சிறந்த முத்து வேறு எதுவுமில்லை. இயற்கை அதிசயங்களில் இதுவும் ஒன்றென மதிக்கின்றனர். இங்கிலாந்தில் இதைவிடப் பெரிய முத்துக்களெல்லாம் இருக்கின்றன. ஆனால், இதற்குள்ள ஒளியும் அழகும் அம்முத்துக்களுக்குக் கொஞ்சமேனும் கிடையாது. நகை வர்த்தகங்கள் சங்கக் காரியதரிசி இந்த முத்தை ஐம்பதினாயிரம் பொன் பெறுமானமுள்ள ஒரு மாலையில் வைத்துக் கட்டினராம். அம்மாலை இம்முத்து ஒன்றினாலேயே கண்களைக் கொள்ளை கொள்ளும் அழகுடன் விளங்குகிறதாம்.

---

## சீனருக்குள் மணவினை.

சீனருக்குள் காணப்படும் கல்யாண ஏற்பாடு மிகவும் விசேஷமானது. மணமக்களின் செல்வ நிலைக்கொத்தவாறு விவாகம் ஒருநாள் முதல் ஒருவருடம் வரையிலும் நடைபெறலாம். மணப் பெண் புக்ககம் செல்லும்போது பல நிறமுள்ள அழகிய மின்சார விளக்குகளால் அலங்கரித்த நாற்காலியில் அவள் உட்கார்ந்திருக்க ஊர்வலமாகக் கொண்டு போகப்படுகின்றாள். வாணவேடிக்கைகள் ஏராளமாய் நடைபெறும். இப்படிச் செய்வதினால் புது மணமாற்றப் பெறுவோரை நாடும் துர்த்தேவதைகள் துரத்தப்படுகின்றன என்று சீனர்கள் எண்ணுகின்றார்கள். மணமகளின் அருகில் ஓர் கிழவி காணப்படுவாள். தேநீர் பானம் செய்வது கல்யாணத்தில் ஓர் முக்கிய அம்சமாகும். விலையுயர்ந்த ஆடையணிகள் மணப்பெண் பூண்டிருந்தாலும் முகமூடி போட்டிருப்பாள். பந்துக்கள் அருகில் சென்று முகமூடியை நீக்கி சம்பாஷணை செய்தால் மட்டிலுமே அவளுக்குப் பேசும் உரிமையுண்டு.

## காலுள்ள பாம்பு.

சமீபத்தில் ரங்காபூர் ஜில்லாவைச் சேர்ந்த சுக்குர்ஹத் என்ற இடத்தில் சில வேட்டைக்காரர்கள் "தன்ராஸ்'' என்ற ஒரு பாம்பைக் கொண்டுவந்து வேடிக்கை காட்டினார்கள். அதற்கு ஒரு அங்குல நீளமுள்ள இரண்டு கால்கள் இருந்தன. அந்த வேட்டைக்காரர்கள் அதனை ஒரு காட்டில் கண்டு சுட்டார்கள். இப்போது அது கல்கத்தா காட்சிச் சாலைக்கு அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

---


# குமரன்

பிரமோதூத வருட டைரி.

இன்னும் சில பிரதிகளே இருக்கின்றன.

விலை ரூபாய் ஒன்றே.

குமரன் ஆபீஸ்

ஏ. வி. அண்டு சன்ஸ்

சாரதா ஸ்டோர்ஸ் காரைக்குடி.

வைசிய மித்திரன் பிரஸ் தேவகோட்டை

ராம. செ. ராம, மொகல் வீதி ரங்கூன்,

ராம. பழ. பிச. ராம. பெல்பீல்டு வீதி, ஈப்போ.

இரும்புப் பெட்டிகள்.

உங்களுடைய விலைபெற்ற பொருள்களைப் பத்திரப்படுத்துங்கள். அதற்கு நயமான இரும்புப் பெட்டி ஒன்று அவசியமல்லவா? எங்களால் கனத்த தகட்டில் செய்யப்பெற்ற கெட்டியான இரும்புப் பெட்டிகள் அழகான வர்ணம் வைக்கப்பெற்றுத் தயாரிலிருக்கின்றன. அதில் ஒன்று வாங்கிவிட்டீர்களானால் திருட்டுக்கும் நெருப்பிற்கும் பயம் இல்லை.

மு. அ. & அ. நா. அ.

இராமசாமி செட்டியார் கம்பெனி,

2/70. பிராட்வே சென்னை

கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்:—

அ. நா. அ. கடை ஈப்போ, அ. பீ. சித உடுமலைப்பேட்டை,

10) வயி ராம. அரு. கடை ரெங்கூன், அ. நா. அ. வீடு கண்டனூர்

தேகாரோக்கியம்
திரண்ட செல்வம்
தீர்க்காயுள்

இவைகள் எங்கள்

மதனமஞ்சரிமாத்திரை

களை உபயோகிப்போருக்கு உண்டாகின்றன. மேலும் மேற்படி மாத்திரைகள் பலஹீனம், ஞாபகக்குறைவு, மலச்சிக்கல், நரம்புகளின் தளர்ச்சிமுதலிய வியாதிகளை காஸ்தமாகக் கண்டிக்கின்றன.

40மாத்திரைகளடங்கிய டப்பி 1-க்கு விலை ரூபா 1.

விவரமான கேட்லாக் இனாம்.

மதனமஞ்சரி பார்மஸி மதருஸ்.

ஏஜெண்டு:— சம்பத் கம்பெனி தெப்பக்குளம், திருச்சி.




# சட்டமறுப்புப் போர்.

## பெண் தொண்டர்கள் பிரசாரம்.

ஸ்ரீமதி கமலாதேவி சட்டோபாத்தியாயா ஸ்ரீமதி முன்ஷி ஸ்ரீமதி புருஷோத்தம் தாஸ் இவர்கள் தலைமையில் பெண் தொண்டர்கள் பம்பாய் ஹைக்கோர்ட்டு கட்டிடத்தில் பிரவேசித்து வக்கீல்கள் புஸ்தகசாலைக்குச் சென்று அங்குள்ளவர்களிடம் சத்தியாக்கிரக உப்பு விற்பனை செய்தனர்.

௨கஅ-ந்தேதி முதல் ஆரம்பிக்கப் போகும் கள்ளுக்கடை மறியல் வேலையில் ஸ்ரீமதி கார்தியாருடன் சேர்ந்து பிரசாரம் செய்வதற்காக மகாத்மாஜி தமது சபர்மதி ஆசிரமத்திலிருந்து கஉ பெண்களை வரவழைத்திருக்கின்றனர்.

## அலாகபாத்தில் பெண்கள் பொதுக்கூட்டம்.

ஸ்ரீமதி மோதிலால் நேரு தலைமைவகித்தார்.

ஏப்ரல் கஎ-தேதி

பண்டித ஜவஹர்லால் நேருவை சிறை புகுத்தியதைக் கண்டிப்பதற்காக மாலை ராமபாக்கில் ஸ்ரீமதி மோதிலால் நேரு தலைமையில் அலாகபாத்தில் பெண்களின் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஸ்ரீமதி நேரு, யாவரும் கதர் அணியவேண்டுமென்று சபதஞ் செய்து சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபடவேண்டுமென்றும், எல்லோர் வீட்டிலும் இனிமேல் உப்புக் காய்ச்சவேண்டுமென்றும் பேசினார். அவர் பேசிமுடிந்ததும் உப்புக்காய்ச்சும் அடுப்பில் தீ மூட்டி "என் மகனைச் சிறையில்புகுத்தியதற்காகநான் பகிரங்கமாக உப்புக்காய்ச்ச இத்தீயை மூட்டுகின்றேன்'' என்றுதெரிவித்தார். ஜனங்களிடையே மிகுந்த உற்சாக மேற்பட்டது. ஸ்ரீமதி கமலா நேருவின் தலைமையில் பெண் தொண்டர்கள் உப்புக் காய்ச்சினார்கள். அவ்வுப்பை ஏலம் போட்டு விற்பனை செய்தனர். அநேக பெண்கள் சத்தியாக்கிரகத் தொண்டர்களாகச் சேர்ந்தனர்.

## மோட்டார் வெகுமதி.

சென்ற வாரத்தில் உப்புச்சத்தியாக்கிரகத்தை முன்னிட்டு திருவாளர் டி. பிரகாசத்தின் மோட்டாரை ஜப்திசெய்து அரசாங்கத்தார் எடுத்துக்கொண்டதை அறிந்து மெஸர்ஸ் சாரி அண்டு ராம் கம்பெனியார் திரு. பிரகாசத்திற்கும், திரு. நகேஸ்வர ராவுக்கும் உபயோகமாகும் வண்ணம் ஓர் மோட்டார் வண்டியை நன் கொடையாக அளித்துள்ளார்கள். அந்த வெகுமதி ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது.

## கல்யாணசுந்தரர் முன்வந்தார்.

சிலதினங்களுக்குமுன்பு "நவசக்தி'' ஆசிரியர் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் உப்பு சத்தியாக்கிரக உறுதி மொழியில் கையொப்பமிட்டு விட்டார். அவருடைய தேக நிலை தற்போது நன்றாயில்லை. எனினும் திரு. ராஜகோபாலாசாரியாரது அநுமதி கிடைத்ததும் போர்முனைக்குச் செல்வதென திருமானித்திருக்கின்றார். அவருடைய தலைமையில் ஏராளமான தொண்டர்கள் போட்டியிட்டுப் போர் முனைபுகப்புறப்படுவாரென்று பொறிக்கப்படுகின்றது.

## வக்கீல் சங்கத்தீர்ப்பு.

ஏப்ரல் கற தேதி தஞ்சை வக்கீல் சங்க அவசரக்கூட்டமொன்றில் சத்யாக்கிரகிகட்கு ஒருவரும் உதவி செய்யக் கூடாதென்று கலெக்டர் பிறப்பித்த சுற்றுக்கடிதம் சட்டவிரோதமானதென்று ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## கோர்ட்டில் அமளி.

### ௨௦ ஆயிரம் ஜனங்கள் கூட்டம்.

காராச்சியில் ஏப்ரல் கஎ தேதி இ பி கோ கஉஎ-வது பிரிவின்படி கைது செய்யப்பட்ட கூ தலைவர்களின் வழக்குவிசாரணைக்குஎடுத்துக் கொள்ளப்பட்ட போது மஜிஸ்திரேட் கோர்ட்டு முழுதும் இடங்கொள்ளாத ஜனத்திரள் காணப்பட்டது. போலீசார் இயன்றமட்டும் முயன்றும் அடக்க முடியாமற் போயினர். எனவே விசாரணை ஒத்தி வைக்கப்பட்டது. சுமார் ௨0 ஆயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள் என்று தெரிகிறது. இக்கூட்டம் கூக்குரலிட்டும் கன்மாரி பொழிந்தும் கோர்ட்டு ஜன்னல்களையும் அருகிலுள்ளவெஸ்லி ஆபீஸ்கட்டிடங்களையும் உடைத்தனர். கோர்ட்டுக்குள் நுழைந்த ஜனங்கள் வக்கீல்கள் மீதும் மற்றவர்கள் மீதும் கல்லெறிந்தனர். எங்கும் புரட்சிக் கீதங்களும் கோஷங்களும் கிளம்பின. குழப்பமிகப்பயங்கரமான நிலையிலிருந்தது.

## ஜன்னிபாதஜுரத்திலும் நெஞ்சுறழாமை.

சிந்துப்பிரதேசத்தில் உப்புக்காய்ச்சியதற்காக சுவாமி கோவிந்தானந்தர் டாக்டர் சோதாராம் முதலியவர்கள் கைது செய்யப்பட்டனர். சுவாமி கோவிந்தானந்தர் ஜன்னிபாதஜுரத்தினால் வருந்துகின்றாராகையினால் அவர் சிறைக்கிட்டுக் கொண்டு போகப்படவில்லை. அவரை ஜாமீன் கொடுக்கும்படி கேட்டனர். அவர் மறுத்துவிட்டார். எனவே போலீசார் அவரை சிறைப்படுத்தாதுவிட்டு விட்டார்கள்.

## தொண்டர்களுக்குத் தொல்லை.

ஏப்ரல் கக தேதி கல்கத்தாவின் சமீபமுள்ள மாசிஸ் பாதத்தில் வேலை செய்து கொண்டிருந்த சத்தியாக்கிரகிகளை போலீசார் மிருகத்தனமாக நடத்தினார்கள். நரேன் ஸர்க்கார் கொதிக்கிற அண்டாவில் அழுத்தப்பட்டார். அவரது நெற்றி முழுவதும் வெந்து போயிற்று. இவர் தடியாலும் புடைக்கப்பட்டார் என்றுதெரிகிறது. கொஞ்ச நேரம் இவர் துன் புறுத்தப்பட்டபோது மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டார். சத்தியாக்கிரகிகள் கொதித்துக் கொண்டிருந்த அண்டாவை கீழே கவிழ்த்துவிட்டனர். உப்பைப் போலீசார் கையில் அகப்படாமல் தண்ணீரில் போட்டு விட்டார்கள்.

## திருநெல்வேலி சத்தியாக்கிரகிகள்.

௩0 தொண்டர்கள் திரு. எ. குப்புசாமி முதலியார் தலைமையில் ஏப்ரல் உஎ தேதி புறப்பட்டு நாங்குநேரி வழியாக ஆறுமுக நேரிக்கு மே மீ௪-ந் தேதி போய்ச் சேர்ந்து அங்கு உப்புச் சட்டத்தை மீறுவார்கள் என்று ஓர் செய்தி கூறுகிறது.

## புதிய காங்கிரஸ் தலைவர்.

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால்நேரு சிறைப்படுத்தப்பட்டுவிட்டபடியால் மகாத்மா காந்தியை காங்கிரஸ் தலைவராயிருக்கப் பலர் கேட்டுக்கொண்டார்கள். ஆனால் மகாத்மாஜீ அவ்வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளாது நிராகரித்துவிட்டார். எனவே பண்டித மோதிலால்நேரு தலைவராக நியமனம் செய்யப்பெற்றுள்ளார்.

## காங்கிரஸ் தலைவருக்குக் கைராட்டினம்.

பண்டித ஜவஹரிலால் தண்டிக்கப்பட்டதை முன்னிட்டு ஆங்காங்கே ஹர்த்தால் நடைபெறுகின்றது. அவருடைய தந்தையார் பண்டிதமோதிலால் நேரு சிறிய கைராட்டின மொன்றை சிறைக்கு அனுப்பியிருக்கிறார்.

---

# செய்தித் திரட்டு.

## விதேச ஆடை மறுப்பு.

### பம்பாய் தொண்டர்கள் வேடிக்கை

விதேச ஆடை பஹிஷ்காரப் பிரசாரம் செய்து வரும் சில தொண்டர்கள் ஏப்ரல் கஎ தேதி ஆறு ஏழு கழுதைகளுக்கு விதேசி ஆடையும் தொப்பியுமணிந்து மூன்று பிரிவாகப் பிரித்து ஊர்வலமாகச் சென்றார்கள். இதைப் பார்த்தவர்களெல்லோரும் குலுங்கக் குலுங்க நகைத்தார்கள்.

## இந்தியக் கவுன்சிலில் புதிய நியமனம்.

இந்தியா மந்திரி சர். வில்லியம் சின்கிளேயர் மாரிஸிற்குப் பதிலாக சர். டெனிஸ்சாமுரேஸ் பிரேயை ககூஙo மே மாதம் முதல் தேதி முதல் இந்தியா கவுன்சில் மெம்பராக நியமித்துள்ளார்கள்.

## 'கிலாபத்' பத்திரிகையின் அபிப்பிராயம்.

'கிலாபத்' என்ற பத்திரிகை இவ்வாறு கூறுகின்றது:—

வைசிராய்க்கு காந்திஜீயையாவது பண்டித ஜவஹரிலாலையாவது கைது செய்யமனமில்லை. ஆனால் ஜவஹரிலால் நேருவை சிறைப்படுத்தியது ஐக்கிய மாகாண கவர்னராகிய சர். மால்கம் ஹெய்லியின் சொந்த அபிப்பிராயமாகும். உப்புவரியை ஒழிக்கும் வழியை யோசிப்பதற்காக ஓர் கமிட்டியை நியமனம் செய்ய வைசிராய் யோசனை செய்து வருகிறார்.

## மௌலானாவின் முயற்சி.

மௌலானா மகம்மதலி பம்பாய் கவர்னரைக் கண்டு மகாத்மா காந்தியை கைது செய்யலாகாதென்றும் அப்படிச் செய்வதானால் சமாசம் ஏற்படாதென்றும், ஆகவே சமாசமகாநாடு நடைபெறாதென்றும் கூறியதாகத் தெரிகிறது.

## திரு.எஸ் ஆர். வரதராஜுலுவுக்கு கசச.

திரு. எஸ். ஆர். வரதராஜுலுமேலிருந்த பாபநாசம் மில் சம்பந்தமான வழக்கை விசாரித்து விட்டு அம்பாசமுத்திரம் மாஜிஸ்திரேட் பாபநாசம் மில்லிற்கு ச மைல் தூரத்தில் எங்கும் அவர் போகக்கூடாதென்று இ. பி. கோ கசச-வது பிரிவின்படி தடையுத்தரவு பிறப்பித்திருக்கின்றார்.

## ஆப்கானிஸ்தானத்தில் குழப்பம்.

ஆப்கானிஸ்தானத்தின் தென்மாகாணங்களில் மீண்டும் குழப்பமேற்பட்டிருக்கிறது. அரசாங்கத்திற்கு அதனை எளிதில் அடக்க முடியவில்லை. கலகம் தற்பொழுது கூலைமான்ஹில், மாங்கார், தாரிசெல், சாத்திரானில் முதலிய இடங்களிலேயே நடைபெறுகின்றது.

## பாபநாசம் ஆலை வேலை ஆரம்பம்.

பாபநாசம் ஹார்வி மில் ஏப்ரல் கஅ தேதி திறக்கப்பட்டுவிட்டது. கூ00 வேலைக்காரர்கள் வேலைக்குப்போனார்கள். மில்லின் எல்லா இலாகாக்களும் திறக்கவில்லை வியாபார நிலை சீர்பட்டுவிட்டால் எல்லாம் திறக்கப்பட்டுவிடும் என்று தெரிகிறது.

## தண்டனை குறைக்கப்பட்டது

திருவாளர்கள் சுபாஷ் சந்திரபோஸ் கிரன் சங்கராய், டாக்டர் ஜே. என். தாஸ், குப்தா மற்றும் கூ காங்கிரஸ் தலைவர்களுக்கு அலிப்பூர்மஜிஸ்திரேட் கோர்ட்டில் க வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. அவர் பின்பு ஹைக்கோர்ட்டில் அப்பீல்செய்து கொண்டதில் தண்டனை கூ மாதமாகக் குறைக்கப்பட்டது.

## மாணவர் வெறுப்பு.

### ஆசிரியர் கொடும்பாவி தகனம்.

ஏப்ரல் கச தேதி அமிர்தசரஸ் பெய்ஜ் நாத் பள்ளிக்கூடத்தலைமையாசிரியரின் உருவத்தைப் போல் கொடும்பாவி யொன்று கட்டி அங்குள்ள மாணவர்கள் அதனைத் தெருவழியாக இழுத்துக் கொண்டு சென்று ஜாலியன் வாலாப்பாக்கில் கொளுத்தினார்கள். இம்மாணவர் மேற்படி ஆசிரியரின் நடத்தையை பலதரம் கண்டித்துப் பேசியதுண்டு. எனினும் ஆசிரியர் தன்னைச் சீர்திருத்திக் கொள்ளவில்லை க0-ங0 மணிக்கு இம்மாணவர் கவர்ன்மெண்டுப்பள்ளிக் கூடத்திற்குப் போக அங்குள்ள மாணவர்களும் வெளியேறினார்களாம்.

மாலையில் நடைபெற்ற ஓர் பொதுக் கூட்டத்தில் டாக்டர் கிச்லு பேசினார். அவர் பேச்சு அஹிம்ஸா தருமத்தை வற்புறுத்திற்று. பல தொண்டர்கள் காந்தியுப்பு விற்றார்கள்.

## மோட்டார் ஓட்டிகள் கலகம்.

ஹஷ்னோடால் புஞ்சா சாகிபில் சித்திரை மாதம் ௨ தேதியன்று இரண்டு மோட்டார் ஓட்டிகளுக்குள் கலகமாரம்பமாக அது பெருகி கடைசியில் சீக்கிய முஸ்லீம் சண்டையாக முடிந்தது.

## சைமன் யாதாஸ்து.

டெயிலி டெலிகிராப் என்ற பத்திரிகை மிஸ்டர் வெட்ஜ்வுட்பென் காமன்ஸ் சபையில் கூறியதைப் பார்த்து சைமன் கமிஷன் யாதாஸ்தின் இரண்டாவது பாகம் மே மாத மத்தியில்தான் அச்சுக்குப் போகுமென்றும் ஆகவே ஜூன் மாத மத்திக்கு முன் வெளியாவதற்கில்லையென்றும் எழுதுகிறது.

## ஜி. ஐ. பி. ரயில்வே தொழிலாளர் வேலைக்குப் போயினர்.

ஜி. ஐ. பி. ரயில்வேத் தொழிற்சாலைகளில் ஆங்காங்குள்ள தொழிலாளர்கள் சிலர் வேண்டிக் கொண்டதற்கிணங்க ஏப்ரல் கூ தேதி காலையில் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பிவிடுவதென மத்ய வேலை நிறுத்தக் கமிட்டியார் முடிவு செய்தனர். தலைவர்கள், முதலாளிகள் தொழிலாளிகளைத்தடை சொல்லாமல் வேலைக்கு வைத்துக் கொள்வார்களெனத் தெரிவித்தார்கள். ஆனால் பரேல், மதுங்கா முதலிய இடங்களுக்குச் சென்ற தொழிலாளிகள் அனுமதிக்கப்படவில்லை. தொழிற்சாலையில் காலியில்லையென்று நோட்டீஸ் போடப்பட்டிருந்தது. ச000 தொழிலாளர்கள் இதன் மூலம் வேலையின்றி இருக்கின்றார்கள். ௨0-உக்குள் எல்லோரும் வேலைக்கு அனுமதிக்கப்படாமலிருந்தால் மே கஙு-ந் தேதி பொது வேலை நிறுத்தம் ஆரம்பிக்கப்படுமென்று அறிவிக்கப்படுகிறது.

## பூனாவில் சேதம்.

ஏப்ரல் கச தேதி இரவு பூனாவில் பலத்த புயலடித்ததால் தெருக்களும் தோட்டங்களும் அலங்கோலமாய் காணப்பட்டன. மரங்கள் பல வேரோடு வீழ்ந்தன. மின்சாரக் கம்பிகள் அற்றுப் போய்ச் சப்ளை நின்றுவிட்டது. எ ங0 மணிவரை பூனா இருள் மூடியிருந்தது. கூ மணிவரை பாதி நகரத்திற்கு மின்சாரமே வரவில்லை. ரஸ்தாக்களில் ஜலம் தேங்கி நின்றது. ஆலங்கட்டி யானத்திலிருந்து விழுந்து கொண்டேயிருந்தது. தோட்டங்கள் பல அழிந்து போயின. உயிர்ச்சேதமெதுவுமில்லை.

# காரைக்குடி முனிஸிபாலிட்டி.

## ஒருவர் ஏலங்கேட்க வேறொரு பெயர் பதிவாகியிருக்கிறது.

### நிருபருக்கு இடமாற்றம்.

### 'எல்லாம் என்னிஷ்டம்.'

அவசரத் தீர்மானத்திற்கு அனுமதியில்லை.

அங்கத்தினர்கள் வெளியேறினர்.

சென்ற சனியன்று மாலை ௪-மணிக்கு ஒரு அவசர மீட்டிங் ஷை கவுன்ஸில் ஹாலில் நடைபெற்றது. ௧௬ அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். விஸிட்டர்கள் ஏராளமாக காலரியிலும் வராண்டாவிலும் இருந்தார்கள். போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் இரண்டு கான்ஸ்டேபிள்களுடன் வந்திருந்தார். பிரஸ் ரிப்போர்ட்டர் காலரியில் குமரன், திராவிடன், ஜஸ்டிஸ், ஊழியன் முதலிய பத்திரிகைகளின் நிருபர்கள் அமர்ந்திருந்தார்கள். தலைவரின் இருபுறங்களிலும் இரண்டு முனிஸிபல்சேவகர்கள் டவாலியுடன் காணப்பட்டார்கள்.

யதுபதிராவ் என்னும் ஓர் பார்ப்பன குமஸ்தாவானவர் குமரன் நிருபரிடம் வந்து நீங்கள் இங்குஉட்காரக்கூடாது; விஸிட்டர் காலரியில் உட்காருங்கள் என சொன்னார்.

குமரன் நிருபர்—நாங்கள் கவுன்ஸிலில் கலகம் செய்யவோ அல்லது மீட்டிங்கைதடைப்படுத்தவோவரவில்லை,கூட்ட நிகழ்ச்சிகளை பொதுஜனங்கள் அறியும் வண்ணம்பத்திரிகையில் வெளியிடக் குறித்துக்கொள்ளவே வந்திருக்கிறோம். இந்த இடத்தில் இருக்கக்கூடாது என்பது நியாயத்துக்குப் பொருந்தாது.

தலைவர்—அதெல்லாம் சொல்ல வேண்டாம். என்னிஷ்டம். நான் இருக்கக் கூடாது என்கிறேன்.

குமரன் நிருபர்—உங்கள் இஷ்டத்தைப் பற்றிப் பேசுவதற்கு இந்தக் கவுன்ஸில் இடங்கொடுக்குமா. நீங்கள் சொல்வது நியாயமல்ல.

தலைவர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரை நோக்கி "இவரை இங்கு உட்காரச் சொல்லுங்கள்" என சொன்னதுமல்லாமல்தனது சேவகன் மூலம் அப்புறப்படுத்தவும் முயற்சி செய்தார்.

சப் இன்ஸ்பெக்டர்— நீங்கள் இவ்விடத்திலிருப்பது அமைதிக்குப் பங்கம் வருமென தலைவர் பயப்படுவதால் நீங்கள் தயவுசெய்து விஸிட்டர் காலரியில் அமருவது நலம் என நினைக்கிறேன்" என்று தெரிவித்தார்.

குமரன் நிருபர்—குமரன் நிருபர் இங்கு இருப்பதால் அமைதிக்குப் பங்கம் வருமென்று தலைவர் பயப்பட வேண்டாம். நாங்கள் அமைதியை சீர்குலைக்க வரவில்லை. எனவே இந்த ஒரு காரணத்தைக்கொண்டு விஸிட்டர் காலரியில் இருக்கிறேன்.

மு ராம—பொதுஜனங்களுக்கு நம்கவுன்ஸில் நிகழ்ச்சியை அறிவிக்கும் நுமரன் நிருபரை பிரஸ் ரிப்போர்ட்டர் காலரியிலிருந்து போகச் சொல்லக் கூடாது. என நான் ஒரு அவசர பிரோபோஸல் கொண்டு வருகிறேன்,

சபீ க மு—நான் இதை ஆமோதிக்கிறேன்.

வெங்கட்டராமய்யர்—இன்றையத்தினக் கூட்டத்தின் விஷயம் இதுவல்ல. ஒரு விஷயம் இருக்கும்பொழுது அதைவிட்டு விட்டு வேறொரு விஷயத்தை எடுக்கக் கொள்ளக்கூடாது. நான் இதை ஆக்ஷேபிக்கிறேன்.

மு ராம—இது மிகவும் அவசரமாகச் செய்ய வேண்டிய விஷயம். மேலும் இது ஆமோதிக்கப்பட்டுமிருக்கிறது.

தலைவர்—அதெல்லாம் எனக்குத் தேவையில்லை. என்னிஷ்டம் அவர் இருக்கக் கூடாது.

மரு சு—விஸிட்டர் காலரியிலிருந்து எழுதலாமல்லவா.

குமரன் நிருபர்—அதைப்பற்றி ஆக்ஷேபிக்கத் தலைவருக்கு யாதொரு உரிமையும் கிடையாது.

பிறகு திராவிடன் நிருபரைப் பார்த்து 'நீங்கள் யார்' என தலைவர் கேட்டார்.

திராவிடன் நிருபர்:—நான் சென்னை தினசரி திராவிடன் நிருபராகிய அ. பொன்னம்பலனார்.

தலைவர்— அதற்கு உங்கட்கு ஏதேனும் அத்தாரட்டி இருக்கிறதா?

திராவிடன் நிருபர்:—ஆதாரம் உண்டு. நீங்கள் ஆபீசுக்கு எழுதிக் கேளுங்கள். வேண்டுமானால் நாளை அனுப்பலாம்.'

தலைவர்— நாளைக்கு நீங்கள் வந்து எழுதிக்கொள்ளுங்கள்.

திராவிடன் நிருபர்— நாளை மீட்டிங்குக்கு நாளை எழுதிக் கொள்வோம். இன்றைய நிகழ்ச்சிகளை யார் எழுதுவது.

பிறகு தலைவர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரை நோக்கி 'இவர்களை விஸிட்டர் காலரியில் உட்காரச்சொல்லுங்கள்" எனச் சொன்னதும் அவரும் சொன்னார்.

திராவிடன் நிருபர்—நாங்கள் கலகத்துக்காக வரவில்லை. அப்படி வந்திருந்தால் கையில் ஆயுதங்களுடன் வந்திருப்போம். நாங்கள் பென்ஸில் பேப்பர் இவைகளோடு தான் வந்திருக்கிறோம். பொதுஜனங்களுக்கும் வரிகொடுப்போர்களுக்கும் இந்த கவுன்ஸில் நிகழ்ச்சிகளைத் தெரிவிக்கவே வந்திருக்கிறோம். ரிப்போர்ட்டர்கள் தேவையில்லையென்று தலைவர் சொல்லும் பக்ஷத்தில் எல்லா நிருபர்களையும் வெளியே போகச்சொல்லி கதவுகளை சாத்திக்கொண்டு அந்தரங்கமாகச் செய்யட்டுமே. நிருபர்களைத் தடைப்படுத்துவது முறையாகாது.

தலைவர்—அதெல்லாம் என்னிஷ்டம் நீங்கள் இந்த உட்காரக்கூடாது என்று சொல்லி பியூனை நோக்கி 'விஸிட்டர் காலரியில் உட்காரச்சொல்' என்றார்.

தலைவர்—(ஜஸ்டிஸ் நிருபரைச் சுட்டிக் காட்டி) இவர்தான் ஜஸ்டிஸ் நிருபர் என்று போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் சொன்னார். உடனே ஒரு குமாஸ்தா ஷை நிருபரிடம் வந்து 'நீங்கள் விஸிட்டர் காலரியில் உட்காருங்கள் என்று சொன்னார்.

ஜஸ்டிஸ் நிருபர்—எனக்கு தலைவரின் ஆர்டர் வேண்டும்.

தலைவர்—நீங்கள் இந்த உட்காரக் கூடாது. அங்குதான் உட்காரவேண்டும். உங்களுக்கு ஏதேனும் நிருபரின் ஆதாரமிருக்கிறதா.

ஜஸ்டிஸ் நிருபர்—என்னை உங்களுக்கு ௯ வருஷமாக மிக நன்றாய்த் தெரியும். எற்கனவே ஆதாரமும் கொடுத்திருக்கிறேன்.

தலைவர்—பழய ஆதாரத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. அதிகமாகப் பேசவேண்டாம். அங்குபோய் உட்காருங்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர்—சேர்மென் ஆர்டரை அனுசரிக்கவேண்டும். இல்லாவிடில் ஏதாவது கலகம் ஏற்படும் என்று நான் நம்புகிறேன். (ஆங்கிலத்தில் சொன்னார்)

ஜஸ்டிஸ் நிருபர்—(போலீஸ் இன்ஸ்பெக்டரை நோக்கி) எனக்கு இன்றைக்கு ௧௨-மணிக்கு சரியானஆதாரம் வேண்டும் என்று ஒரு கடிதம் வந்தது. என்னிடத்தில் ஆதாரங்களிருக்கின்றன. இப்பொழுது கொண்டுவரவில்லை. (ஆங்கிலத்தில் பதில் சொன்னார்).

போலீஸ் இன்ஸ்பெக்டர்—இப்பொழுது சேர்மென் சொன்னதை அனுசரிக்கவேண்டும். பிறகு நீங்கள் ஸ்பெஷல் மீட்டிங்கை கூட்டும்படிச் செய்து இதைப்பற்றி ஆலோசித்துச் செய்யலாம்.

ஜஸ்டிஸ் நிருபர்— இக்கக் கவுன்ஸிலில் கலகம் ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கமில்லை. இந்தக் கவுன்ஸிலை நான் கௌரவப்படுத்துகிறேன். தலைவர் சொல்லுகிறபடி சேர்மனுடைய ஆர்டரை அனுசரிக்கிறேன்.

(இதற்கிடையில் திரு. மு. ராம. பெரியண்ணன் செட்டியாரவர்கள் எழுந்திருந்து ஜஸ்டிஸ் நிருபரைக் காண்பித்து இவர் ஜஸ்டிஸ் நிருபரென்று ௯ வருஷங்களாக எல்லோருக்குந் தெரியும் என்று சொன்னார்.)

மு ராம—திராவிடன் ஜஸ்டிஸ் நிருபர்களைத்தான் ஆதாரம் கேட்கிறீர்கள். குமரன் நிருபருக்கு ஆதாரமிருக்கும்பொழுது அவரை வெளியேற்றக் காரணமென்ன'

தலைவர்—அது என்னிஷ்டம். தயவு செய்து இந்த மூன்று நிருபர்களும் விஸிட்டர் காலரியில் உட்காருங்கள் என்று சொல்ல அவர்களும் பெருந்தன்மையாக விஸிட்டர் காலரியில் உட்கார்ந்தார்கள். பிறகு ஊழியன் ரிப்போர்ட்டர் ஒருவரே அந்த இடத்தில் இருந்தார். இதுவிஷயமாக விஸிட்டர் காலரியில் ஒரு பெரிய பரபரப்பு ஏற்பட்டது. விஸிட்டர் பலரும் பலவாறாக தலைவரின் நடத்தையைக் குறித்து ஆத்திரமாக பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு ஒருவாறாக கூட்டம் ஆரம்பிக்கப்பெற்றது.

டோல்கேட் ஏலத்தை கான்சல் செய்ய திருவாளர்களான மு ராம பெரியண்ணன்செட்டியார், சபீ க மு முகம்மது இபுராஹிம் ராவுத்தர், அ மு க முத்துக் கருப்பன் செட்டியார், ஸ்ரீமதி மரகதவல்லி அம்மாள் கே குருசாமி ஆகிய ௫ பேர்களால் பிரேரேபிக்கப்பட்ட அடியிற்கண்ட தீர்மானம் ஆலோசனைக்கு வந்தது.

காரைக்குடி டோல்கேட் ஏலத்தில் ௧௯௩௦-ம் வருஷம் மார்ச்சு மீ ௨௭௨ நடைபெற்ற மீட்டிங்கில் முனிஸிபல் கவுன்ஸில் ஷை கேட்டுகளை வத்தலக்குண்டு கா நசன் ராவுத்தருக்கு ௩,௪௦௦ ரூபாய்க்கு முடிவு செய்திருக்க ஷை கேட்டுகளின் சுங்கம் வசூல் முதலிய வேலைகள் வேறொரு நபர் செய்வதாக இருப்பதாலும், ஷை கேட்டுகளை ௩௫௦௦ ரூபாய்க்கு ஒரு நபர் ஒப்புக்கொள்வதாக விண்ணப்பம் வந்திருக்கிறபடியாலும் முனிஸிபாலிட்டிக்கு வரக்கூடிய 'லாபத்தை ஆலோசித்து வேண்டிய ஏற்பாடு செய்ய இந்தக் கவுன்ஸில் தீர்மானிக்கிறது.

ஷை தீர்மானத்தை திரு சபீ க மு முகமது இப்ராஹிம் ராவுத்தவர்கள் பிரபோஸ் செய்தார்.

மு ராம—இது ரொம்ப அவசியம். கவனித்துச் செய்யவேண்டிய விஷயம். நான் ஆமோதிக்கிறேன்.

தலைவர்—இதை யாராவது ஆக்ஷேபிக்கிறீர்களா?

வெங்கட்டராமய்யர்—நான் ஆக்ஷேபிக்கிறேன்.

அ மு க—இதுசம்பந்தமான பேப்பர்கள் யாவும் பார்க்கவேண்டும்.

தலைவர் — அதெல்லாம் இருக்கிறது.

அ மு க — அதெல்லாம் முடியாது. அவைகள் யாவும் கவுன்ஸில் மேசைக்கு வரட்டும்.

இது விஷயமாக சிறிது குழப்பம் ஏற்பட்டது. பிறகு ஷை பேப்பர்களும் ஒருவாறாக மேஜைக்கு வந்தன. ஏலங்கேட்கும் டிபாஸிட் புஸ்தகத்தில் வரிசைக்கு இரண்டு பெயர்கள் எழுதியிருப்பதையும் தீர்மான புத்தகத்தில் ஒரே பெயர் மட்டும் காணப்படுகிறதையும் கண்டு கவுன்ஸிலர்களுக்குள் சந்தேகமும் குழப்பமும் ஏற்பட்டன. ஷை விஷயத்தைக் குறித்துக் கேள்விகளும் சரமாரியாக கேட்கப்பட்ட வண்ணமாக இருந்தது.

மரு சு—கூட்டத்தைக்கலைத்துவிட்டால் தேவலை.

வெங்கட்டராமய்யர்—நான் ஆமோதிக்கிறேன்.

அ மு க—கூட்டத்தை என் கலைக்க வேண்டும். சந்தேகப்பட்ட கேள்விகளுக்கு பதில் சொல்லவேண்டுமேயல்லாது கலைக்கக் கூடாது.

தலைவர்—நடத்தத் தயாராயில்லை.

மு ராம—நடத்தவேண்டுமென்று நாங்கள் பிரபோஸ் செய்கிறோம். முடியாது என்னிஷ்டம் என்றால் நாங்கள் என்ன செய்வது. நாங்கள் வேறொரு சேர்மனை மெஜாரிட்டியாரால் தேர்ந்தெடுத்து கூட்டத்தை நடத்துகிறோம். வேறென்ன செய்வது. தலைவருக்குக் கூட்டத்தை நடத்தும் திறமையில்லாமல்போனால் என்ன செய்வது.

தலைவர்—அது என்னிஷ்டம்.

மு ராம— எல்லாம் உங்களிஷ்டப்படி நடக்காது.

வெங்கிட்டராமய்யர்—இதை ஒத்திவைத்தால் நலம்.

அ மு க— நான் நடத்தவேண்டுமென்று பிரபோஸ் செய்கிறேன். நீங்கள் ஓட்டுக்கு விடுங்கள்.

தலைவர்— ஓட்டுக்கு விடுவது என்னிஷ்டம்.

மு ராம— அதுதான் உங்கட்குத் தெரியும்.

தலைவர்— நீங்கள் எப்பொழுதும் அளவுக்கு மீறிப் பேசுகிறீர்கள். போலீஸ்காரன்களுக்கும் தெரியும்.

மு ராம—போலீஸ்காரர்கள் என்று மரியாதையாகப் பேசுங்கள். உங்களுடைய சொந்த வேலைக்காரர்களா அவர்கள்?

தலைவர்—அதெல்லாம் எனக்குத் தெரியும்.

மு ராம—தெரிந்துதான் இப்படிப் பேசுகிறீர்களோ?

சித கா— நடக்கட்டும், நடக்கட்டும்.

வெங்கிட்டராமய்யர்—ஏலத்தை சென்ற மாதம் ௩௧-ந்தேதிக்கு முன்னால் மாற்றியிருக்கலாம். ஏலம் முடிவு செய்து Possession ம் ஆகிவிட்டது. ஏலத்தைத் திரும்பவும் போடமுடியாது.

இத்தருணத்தில் திரு மெ செ ச சிதம்பரம் செட்டியார் வந்தார்கள்.

தலைவர்—கவுன்ஸிலர்கள் இருந்துதான் முடிவுசெய்திருக்கிறார்கள்.

ச பீ ந மு— நான் வந்திருந்தேன். கா. அசன் ராவுத்தர் என்பவருக்குத்தான் விடப்பட்டது. இப்பொழுது தீர்மானப் புத்தகத்தில் வேறொரு பெயர் காணப்படுகிறதே.

தலைவர்— அதெல்லாம் சரி, இப்பொழுது செய்யவேண்டுவதென்ன?

மு ராம—இந்த ஏலத்தை கான்சல் செய்து மறு ஏலம் போடவேண்டும்.

தலைவர்—தீர்மானம் அப்படிக் கொண்டுவரவில்லை, 'ஆலோசிக்கிறது' என்றுதானிருக்கிறது.

மு ராம—ஏல சம்பந்தமாக யோசித்து வேண்டியதைச் செய்யவேண்டியது.

வெங்கிட்டராமய்யர்— ஏலத்தைப்பற்றி யோசிக்கவேண்டும் என்று ஒரு விண்ணப்பம் வந்திருக்கிறது. அதை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று முடிவான பிறகு யோசிப்போம்,

பிறகு ஷை தீர்மானத்தை யோசிப்போம் என்னும் விஷயத்திற்கு ஓட்டு எடுக்கப் பெற்றது. தீர்மானத்துக்கு சாதகமாக ஓட்டு கொடுத்தவர்கள்.

திருவாளர்

„ மு ராம பெரியணன் செட்டியார்

„ அ மு க முத்துக்கருப்பன் செட்டியார்

„ சி மு அரு முத்துராமன்செட்டியார்

„ முத்து அரு சித சிதம்பரம் செட்டியார்

„ கா வ. பழனியப்ப செட்டியார்

(௧௧-ம் பக்கம் பார்க்க)



# முனிஸிபல் தலைவர்மீது கண்டனம்.

(நமது நிருபரிடமிருந்து)

கடந்த திங்கட்கிழமையன்று மாலை ௬ மணிச் சுமாருக்கு கல்லுக்கட்டி ஊருணி மேல்கரையில் காரைக்குடி வரி கொடுப்போரின் சார்பாக ஒரு பொதுக் கூட்டம் கூடிற்று. சுமார் ஆயிரம் ஜனங்கள் பிரசன்னமாயிருந்தார்கள். திரு. சி. பெரி. சி. மெய்யப்பா அவர்கள் தலைமை வகித்தார். அவர் தற்போதிய காரைக்குடி முனிஸிபாலிடியின் நிலையையும், அதில் நிரம்பிக்கிடக்கின்ற ஊழல்களையும், பொதுஜனங்கள் அவற்றை அறியவேண்டிய அவசியத்தையும் அடிக்கடி கூட்டங்கள் கூட்ட வேண்டியதின் கருத்தையும் விளக்கி முகவுரையாகப் பேசினார். அப்பால் அவர் கேட்டுக்கொண்டபடி குமரனாசிரியர் சொ. முருகப்பா அவர்கள் "முனிஸிபல் கவுன்ஸிலும் பொதுஜன நன்மையும்" என்ற விஷயத்தைப்பற்றிப் பேசியதன் சுருக்கம் வருமாறு:—

அன்பார்ந்த சகோதரர்களே!

நாம் இனி இம்மாதிரியான கூட்டங்கள் பல கூட்டவேண்டும். ஆதியில் இவ்வூர் ஒரு யூனியனாகமட்டுமிருந்தது; இப்போது முனிஸிப்பாலிட்டியாகிவிட்டது. இன்னும் கொஞ்சநாளில் பெரும் ஜங்ஷனும் ஆகிவிடும். ஆகவே நமக்கு அடிக்கடி கூடிப் பேசவேண்டிய அவசியம் அதிகமாய் ஏற்படுகிறது.

நான், பத்திரிகை நிருபர்கள் அனுமதிக்கப்படவில்லை யென்ற காரணத்திற்காக இங்கே பேசவரவில்லை. அதனை நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. பத்திரிகைகளுக்கு எவ்வளவு வலிமையுண்டு என்பது எனக்குத் தெரியும். அதனைக் காட்டவும் தயாராயிருக்கிறேன். கானடைவில் உங்களுக்கும் அறிய முடியும். நிருபர்களை நிறுத்திவிடுவதற்காகச் செய்தி கிடைக்காமற் போவதில்லை. நிருபர் கொண்டுவருவதைவிட அதிகமான செய்தி நிருபர் இல்லாதபோது கிடைக்கும். பத்திரிகைகட்குச் செய்தியை ஆள் கொண்டு வரவேண்டுவதில்லை. காற்று கொண்டு வரும், மனிதர்விடும் மூச்சுக்கொண்டுவரும். சீமையிலே பார்லிமெண்டிலே முக்கிய மெம்பர் மனத்திலே கிளைப்பது நாளை 'ஹிந்து' பத்திரிகையிலே வரக்கூடும். எனவே குமரனில் முனிஸிபல் செய்தி குறைபடப்போவதில்லை. அரசாங்கத்திலிருந்து பத்திரிகைகளுக்கு எவ்வளவோ சௌகரியங்கள் செய்யப்பெற்றுள்ளன. ஒருவனுக்கு ஒரு கடிதத்திற்கு ௬ அணா செலவிட வேண்டுமென்றால் பத்திரிகைக்குக் காலணா தபாற் செலவு போதும். பொதுஜனங்களின் தந்திக்கு ஒரு அணாவானால் பத்திரிகை தந்திக்கு இரண்டு தம்படிதான். ஒரு பத்திரிகைக்காரன் வேறெவருக்கும் பயப்படப்போவதில்லை. பதினாயிரம் பதினாயிரமாக சொத்துடையவர் சிபார்சுக்கு ஆள்பிடித்துக்கொண்டு உத்தியோகஸ்தரைக் காணப்போவாரானால் ஒரு பத்திரிகை நிருபர் ஒரு கார்டைக் காட்டி உள்ளே சென்று பேசக்கூடும். பத்திரிகையின் அருமையும் நிருபரின் பெருமையும் படித்த அறிவாளிகட்கே விளங்கும். திண்ணைப் பள்ளிக்கூட ஆட்களுக்கு விளங்காது. நான் இப்போது பத்திராதிபர் என்ற நிலையில் பேசத்தொடங்கவில்லை. அந்த நிலையில் எனக்கு என்பேனாவை உபயோகித்துக்கொண்டு ஓரிடத்திலிருக்கத் தெரியும். இப்போது நான் இங்கு வரிகொடுப்போன் என்ற நிலையிலேயே பேசுகின்றேன். இவ்வூர் நம்முடையது. அது அரசாங்கத்திற்கோ, உத்தியோகஸ்தர்கட்கோ, சில குறிப்பிட்ட நபர்கட்கோ சொந்தமானதல்ல. முனிஸிப்பாலிட்டியும் அதன் கட்டிடமும் அதிலுள்ள வேலைக்காரர்களும் நாற்காலியும் மேஜையும் மேஜைவிரிப்பும் மைப்புட்டியும் நம்முடைய பணத்தினால்தான் இருக்கின்றன. இவைகளெல்லாம் நம் சுகத்திற்கும் சுகவாழ்விற்கும் சுகாதாரத்திற்குமேதான் அமைந்திருக்கின்றன. சிலர் உத்தியோகம் செய்வதற்கும் அதிகாரம் செலுத்துவதற்கும் மட்டும் அமைந்ததன்று.

முனிசிப்பாலிட்டி ஏன் அமைந்தது? கொஞ்சநாட்களுக்கு முன் இது ஒரு யூனியனாக மட்டுமிருந்தது. அதுகாலையில் இங்குள்ள ஜனங்களெல்லோரும் எங்களுக்கு முனிஸிபாலிடி அவசியமில்லையென்று பல மனுக்க

## ஆயிரம் ஜனக் கூட்டம்.

## வெங்கட்டராமய்யரின் விஷமத்தனம்.

### திருபர்களை அனுமதிக்காத காரணமென்ன?

### வண்டவாளம் வெளிப்படுமென்பதே.

இதுவரை செய்த நன்மை சண்டைதான்.

ளெழுதி அரசாங்கத்திற்கு சமர்ப்பித்தார்கள். ஒருக்கால் அது தற்போது அடைந்திருக்கின்ற கேவல நிலைமைக்கு வந்துவிடுமென்று முன்னமே அறிந்திருந்தார்களோ என்னவோ? அவர்கள் வேண்டுகோளொன்றும்பலன்படவில்லை; முனிஸிபல்ஸ்தாபனம் பலன்பட்டுவிட்டது. ஒன்றரை வருடகாலமாக இந்த ஸ்தாபனம் செய்ததென்ன? ஒன்றும் செய்யவில்லையென்றே சொல்லலாம். அப்படியானால் இதுகாறும் ஏன் இம்மாதிரி கூட்டம்கூடி ஏன் குறைகளைச் சொல்லிக்கொள்ளவில்லை என்று கேட்கலாம். இதுகாறும் முனிஸிபாலிட்டி தொடக்கமான நிலையிலிருப்பதால் காலாவட்டத்தில் சீர்படுத்தும் என்று பார்க்கப்பட்டது. ஆனால் நாட் போகப்போக விஷயம் மிக மிக மோசமாகிக்கொண்டே வருகின்றது. கௌன்ஸிலில் அக்கிரமம் நிறைந்துபோயிற்று. ஆகவே இனி சும்மாவிருக்க முடியாது.

செப்டம்பர் மீ ௨௦உ யன்று இவ்வூரில் பன்றிகளின் உபத்திரவம் கூடிவிட்டது; ஆகவே அகற்றவேண்டு மென்ற தீர்மானம் ஒன்று கௌன்ஸிலில் நிறைவேறியது. ஆனால் இன்றளவும் ஏதேனும் செயலில் வந்ததுண்டோ? இவ்வூரில் எத்தனை பன்றிக்குட்டிகள் ஊருணியிலும் வழியிலும் சாக்கடையிலும் கிடந்து உருளுகின்றன. எட்டுத்தரம் தீர்மானம் நிறைவேற்றிப் பயனென்ன? ஒரேகுத்தாய் குத்திப் பன்றிகளைக் கொன்றுவிடலாமென்ற தீர்மானிக்கப்பட்டது எங்குபோயிற்று.

இரண்டாவது இவ்வூரில் ஓர் பெண் பள்ளிக்கூடமும் ஓர் ஆண் பள்ளிக்கூடமுமிருக்கின்றன. அங்குள்ள மாணவர்கட்கு மூச்சு விட இடமில்லை; நல்லகாற்றுக் கிடையாது; சாக்கடைத்தண்ணீர் முழுதும் அப்பள்ளிக்கூடத்தைச்சுற்றி கொண்டு கொட்டப்படுகின்றது. கற்றாழை பாடசாலையைச் சுற்றிச் சுற்றி வளர்ந்து படர்கின்றது. அவற்றை வெட்டவேண்டுமென்றால் அதற்குத் தலைவர் செவி சாய்ப்பதில்லை; ஊர்க்குப்பையும் அழுக்கும் அங்குதான் சேர்த்துக்குவிக்கப்படுகின்றன. ஊரிலுள்ள ஜனங்களெல்லோரும் பள்ளிக்கூடத்தைச் சுற்றிலும் மலங்கழிக்கின்றார்கள். ஆகவே சுருக்கச் சொல்லில் சிறபிள்ளைகளைக் கொலை செய்கிறார்கள். ஏன் கற்றாழையை வெட்டி குழந்தைகளாகிய அவர்கட்கு உபயோகமாகும் வண்ணம்பூந்தோட்டங்கள் அமைக்கலாகாது என்று கேட்கின்றேன். முனிசிப்பாலிட்டிக்கு இதிலும் மேலான வேலை என்ன இருக்கின்றது. நமக்கு வேண்டுவன இரண்டு; ஒன்று மானம்; இரண்டு சுகாதாரம். இவைகளுக்கு நம் நகரசபை ஏதுவேனும் செய்வதுண்டோ? இவ்வூரிலுள்ள பெரிய பெரிய மனிதர்களுடைய மனைவியரெல்லாம் மானத்தை விட்டு வெளியே வந்து குந்தியிருக்கின்றார்கள். இந்த அவமானத்தை நீக்க முனிஸிப்பாலிட்டி ஏன் முன்வரவில்லை. ச. பீ. க. மு. கடைக்கு முன்னுள்ள தட்டியைப் பிரிக்கும்படி நோட்டீஸ் வந்திருக்கிறது. கா. வ. பழனியப்ப செட்டியார் வீட்டுக்கு முன்னால் இருபது வருஷமாக இருந்துவரும் கொட்டகையைப்பிரிக்க நோட்டீஸ்பறக்கிறது. பெரியணன் செட்டியார் வீட்டுப் படியை எடு என்ற நோட்டீஸ் பறக்கிறது. குமரன் ஆசிரியர் வீட்டில் கக்கூஸ் இல்லாவிட்டால் பிராஸிக்கூட் செய்ய முன்வருவார்கள். இந்த வேலைதான் நடக்கிறது.

தனக்குக் கீழ்ப்படியாவிட்டால் சட்டங்கள் அமுல்கள் வெளிவருகின்றன.

சென்ற ஜனவரி மாதத்தில் ௪ ஆண் பள்ளிக்கூடம்வைக்க வேண்டுமென்று கௌன்ஸில் தலைவருக்கு சர்வாதிகாரம் கொடுக்கப்பட்டது. இன்றளவும் எதுவும் நடக்கவில்லை பணமில்லையா? இடமில்லையா? அல்லது பார்ப்பன வாத்தியார்கள் அகப்படவில்லையா?

ஆதித்திராவிடர் ஹோம் படும்பாடு உங்களெல்லோருக்குந் தெரியும். முந்தின சேர்மன் வெகுபாடுபட்டு சிவகெங்கை ராஜாவிடம் நிலம் வாங்கினர். ராவ்பகதூர் சுப்பையா செட்டியார் பத்தாயிரம் கொடுத்தார். என்ன நேரத்தில் கொடுத்தாரோ தெரியவில்லை. இழுபடுகிறது. மந்திரி சுப்பராயன் அவர்களைக் கொண்டு அஸ்திவாரம் போடப்பட்டது. அவரை வரவழைக்க இதொரு காரணமாக உபயோகப் படுத்தப்பட்டது. முடிவென்ன? கல் நின்றபடி நிற்கிறது. அன்று வந்தவர்கள் இன்று வரை அப்பக்கம் அடியெடுத்துவைக்கவில்லை. ஏன் வைக்கிறார்கள். மந்திரி வந்தாய் விட்டது. மாலை போட்டாய்விட்டது. ஆதிதிராவிடர் எப்படிப்போனால் இவர்கட்கென்ன?

பெண்களுக்கும் குழந்தைகட்கும்டிஸ்பென்சரி திறக்க முழு அதிகாரமும் தலைவருக்குக் கொடுக்கப்பட்டது. கனம் மந்திரி முத்தையா முதலியார் வரவழைக்கப்பட்டார், மாலை போடப்பட்டது. ஒரு சந்தில் திறக்கப்பட்டது. அன்றோடு அது சமாப்தி, அந்த வீட்டில் யாரோ ஒருவர் குடியிருக்கிறாரென்று தெரிகிறது.

நல்ல குடிதண்ணீர் கிடைப்பது. இந்த ஊரணித் தண்ணீரைப் பாருங்கள். சிவன் கோவில் பக்கம் போகமுடியவில்லை. அந்த தண்ணீரின் நாற்றம் சகிக்கமுடியவில்லை. முத்தாத்தான் ஊருணி நீரைக் குடிக்க மனிதர் இருக்கின்றனர். ஊர் ஜனங்கள் முழுமையும் ரோடுகளில் மலஜலங் கழிக்கின்றனர். அவைகளை வாரிவழித்துக் கொண்டு மழைத் தண்ணீர் ஊருணியில் பெருகிவருகின்றது. இதைக்குடிக்கலாமா? முனிஸிபாலிடி என்ன செய்யவேண்டும். என்ன செய்கிறது. அதன் தலைவர்தான் செய்கிறார்? நல்ல தண்ணீர்வேண்டுமென்பதைவிட வேறு எது அவசியமாக இருக்க முடியுமென்பதை யோசித்துப் பாருங்கள்.

வீடுதோறும் கக்கூஸ் கட்டவேண்டுமென்று எவ்வளவோ நாளுக்குமுன் தீர்மானமாகியிருக்கிறது. அமுலுக்குவரவில்லை. என் வரவில்லை. மாமன் மைத்துனன் வேண்டியவன் என்று பார்த்து தாட்சண்யம் காட்டி மழுப்பப்படுகிறது. மூத்துப் பட்டணத்தில் குழிக் கக்கூஸ் கட்டுவதெனத் தீர்மானித்துப் பல மாதங்களாகின்றன. எப்போது அந்தக் குழி தோண்டப்படுமோ தெரியவில்லை.

ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகும்வழியைச் சீர்படுத்தப் பணம் சாங்க்ஷனாகியிருக்கிறது. இதுவரை ஒன்றுமில்லை. கற்றுழைக் காட்டுக்குள் நாடுமூடான பள்ளம் படுகுழிகளில் சாமான் ஏற்றிய வண்டிகள் படும்பாடு கொஞ்சமல்ல. இரண்டு மைலுக்கு ஒன்றே முக்கால் ரூபா கூலி கேட்கிறான். இது முக்கியமல்லவா?

ஸ்டேஷனுக்கும் டவுனுக்கும் மிடையிலுள்ள நிலத்தை முனிஸிபாலிடிக்கு வாங்கி வீதிகள் விசாலமாகப் போட்டு முக்கியமான ஆபீசுகளுக்கு முன்னிடங்களைக் கொடுத்துப் பாக்கியை விற்கலாமென்று யோசித்து ஒரு தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. அதற்காகத் தலைவர் இதுவரை என்ன செய்தார் என்று கேட்கிறேன். நகரமாக அந்த இடங்களைவாங்கிப் பங்கு போட்டுக்கொள்ள வேலை நடக்கிறது. அந்த இடத்தை வாங்கினால் முனிஸிபாலிட்டிக்கு வேறு வரிகூடப் போடவேண்டிய அவசியமிராது.

இன்னும் செய்ய வேண்டிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. வர வர சண்டைவலுவடைகிறதே தவிரக் காரியம் ஒன்றும் நடக்கவில்லை. கௌன்ஸில் சர்வ ஊழலாகிவிட்டது. அவைகள் வெளியாகாமல்—பொதுஜனங்களுக்குத் தெரியாமல் மறைப்பதற்கும் முயற்சி ஆரம்பிக்கப்படுகிறது. தீர்மானம் வாசிக்க முடியாது; நகல் மெம்பர்கட்குக்கூட அனுப்ப முடியாது; பப்ளிக் காப்பிகளுக்குப் பணமனுப்பினால்திருப்பப்படுகிறது. இந்த நிருபர்கட்கும் இடமில்லை. இதன் கருத்தென்ன? இதற்கு மேல் விட்டுவைக்க முடியாது.

குடி தண்ணீர் வசதியில்லை. தெருவெல்லாம் மலஜல நாற்றம். கொசுக்களைக்கடித்து விழுங்குகிறது. மோட்டார்த் தூசி மூக்கை அடைக்கிறது. இப்படிப் பழுப்பட்ட ஊரிலிருப்பது கஷ்டமாகஇருக்கிறதென்று அடுத்த இடத்தில் சில நாள் இருக்க மென்றால் இந்த ஊரிலுள்ள பாத்தியத்தை ரத்து செய்கிறேனென்கிறார் தலைவர்.

திருவாளர் சொ. முருகப்பா அவர்கள் பேசி முடித்ததும், திரு. அ. பொன்னம்பலனார் பேசியதன் சுருக்கம் வருமாறு:—

சகோதரர்களே!

நான் இவ்வூருக்குச் சொந்தமானவன்; வரிகொடுக்க உரிமைப்பட்டவன்; இச்செட்டிமார் நாட்டுக்கு நானும் செட்டியார் எனப் படுகின்றவன்தான். ஆகவே எனக்கு இவ்வூர் முனிசிபாலிடியைப் பற்றிப் பேச உரிமையுண்டு. அன்றியும் வரி கொடுக்கும் சில அன்பர்கள் என்னிடம் தற்போது நகரசபையின் நிலைமையைப் பற்றிக் கூறிப் பேசவும் கேட்டிருக்கின்றார்கள்.

முனிசிபாலிடி ஓர் பொது ஸ்தாபனம். இது இவ்வூர் பொதுஜனங்கட்குரியது. அதில் குறைகள் தென்பட்டால் அவற்றை ஒழித்தாகவேண்டும். ஜாதி, மதம், கடவுள் இவை மக்களுடைய உரிமையை, அறிவைப் பாதிக்கின்றதனால் எவ்வாறு அவற்றை ஒழிக்கவேண்டுவனவற்றை ஒழித்து சீர்திருத்தவேண்டுவனவற்றை சீர்திருத்த வேண்டுமென்று முயல்கின்றோமோ அது போலவே நகரசபையிலும் சில மாற்றங்கள் செய்யவேண்டுவதன்று. அக்கௌன்ஸிலில் எல்லா மக்களும் தலையிடவேண்டும். வெற்றிலைக் கடைக்காரர்கள், காப்பிக் கடைக்காரர்கள், மற்றத் தொழிலாளிகள் எல்லோரும் பங்கெடுக்கவேண்டும். நான் பிழூட்கள் கஷி அல்லது எனக்கு உடல்புசுக்கு சரியில்லை யென்று யாரும் வீணாகத் தம் கடமையைச் செய்யத் தவறிவிடலாகாது. ஜனங்கள் தம் கடமையை மறப்பதானாலும் ஒரு நாடு முன்னேற்றமடையுமா என்று கேட்கிறேன். இப்போது மனிதனுடைய தன்னம்பிக்கை பாழ்பட்டுவிட்டது. சண்டைகள் கலகங்கள் பெருகிவிட்டன. யூனியன், கார்ப்பொரேஷன் முதலியனவெல்லாம் மனிதனுடைய நன்மைக்காக ஏற்பட்டிருக்கின்றன என்றும், அந்த நியாய வழியில் வேலைசெய்து வருகின்றது. அதற்கு மனிதனின் குற்றமேயல்லாது வேறு காரணமில்லை. நமக்கு நல்ல காற்று, உணவு, தண்ணீர் இவைகள் வேண்டும். நம் பணத்தை வாங்கிக்கொண்டு நம் நகரசபை ஏதேனும் செய்கின்றதோ? இல்லை. இவ்வூரைப்போலவேதான் எங்கும் முனிசிபாலிடிகளில் ஒழுங்கீனங்கள் வழங்குகின்றன. ஸ்ரீவில்லிபுத்தூர், விருதுநகர், மதுரை இவ்வூர்களில் வெவ்வேறு இவ்வண்ணமே சண்டைகள் நிகழ்கின்றன. மதுரையில் கொஞ்ச நாட்களுக்கு முன்பு தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுவிட்டது. அந்தக் காற்று இங்கு வீசவருகிறதுபோலும்.

(௰-ம் பக்கம் பார்க்க)

## குமரனுக்கு ஏஜண்டுகள் தேவை.

செட்டிமார்நாட்டிலுள்ள ஒவ்வொரு ஊரிலும் குமரன் பத்திரிகையை விற்பனை செய்வதற்கு ஏஜெண்டுகள் தேவை. தகுந்த கமிஷன் கொடுக்கப்படும். வெளியூர்களில் ஒரு ஊருக்கு ஒரு ஏஜண்டுதான் நியமிக்கப் போகிறபடியால் முந்திக் கொள்ளுங்கள்.

மானேஜர் குமரன் ஆபீஸ்,
காரைக்குடி.

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
... 

காவென் செயும்! வினைதா னென் செயும்! எனையாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற் றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன் னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்

குமரன், காரைக்குடி.
பிரமோதூத ௵ சித்திரை-மீ ௧௨-உ

## ஈரோடு சங்கீத மகாநாடு.

தென்னாட்டில் சங்கீதக்கலை மிகுதியும் பரவுதற்குப் பல தடைகளிருக்கின்றனவென்பது அத்துறையி லீடுபடுவார்க்கு இனிது விளங்கும். ஆனால் தமிழ்மக்களது வாழ்வில் எல்லாவற்றுக்கும் இடர்ப்பாடு நிறைந்திருப்பது போலவே இத்துறையிலும் நிறைந்திருக்கின்றது. சங்கீதக் கலையானது எந்தக் காலத்திலும் எந்த தேசத்திலும் போற்றப்படுவதொன்றாகும். சங்கீத ஞானமென்பது சங்கீதக் கணக்கறிந்த புலவர்கள் மட்டுமன்றி சாதாரணமான எவரும் ரசிக்கத்தக்கதொன்றென்பதே நமதபிப்பிராயம். சாதாரண மக்கள் மட்டுமல்ல, பசு முதலிய மிருகங்களும், பறவைகளும், பாம்பு முதலிய பிராணிகளும் இசையிலீடுபட்டு உணர்வழிந் தின்புறுவதைக் காணலாம். பச்சைப் பசுங் குழந்தைகளும் இசை நலங் கண்டு அழுதலொழிந்து இன்முகங் காட்டுகின்றன. கவலையொழிந்து, அலைச்சல் ஒழிந்து, பொறாமை முதலிய குணங்களை விட்டு இல் பக்கடலாடுதற்கு சங்கீதம் ஒருவகையில் சிறந்த சாதனமாக இருக்கிறதென்பதி லையமில்லை. இச் சங்கீதக்கலையானது தன்னுடைய பெருமையை நமது தமிழகத்தில் காட்டி நிற்கவில்லையென்பதை நாம் உணருகிறோம். சங்கீதக் கலைக்கு உள்ள மதிப்பு ஜாதியைப் பொறுத்து நிற்கிறதென்னும் செய்தியைச் சிலரே அறிந்திருப்பர். மற்ற துறைகளிற் போல இத்துறையிலும் பார்ப்பனர்கள் போதிக்கம் பெற்றிருக்கின்றனர். பார்ப்பன ரல்லாதார் எத்துணை சிறந்த அறிவாளராக இருந்தாலும் அவருடைய ஜாதியினுல் அவர்கள் பெற்றுள்ள கலைஞானமும் பெருமை பெறுதொழியும் நிலை யேற்பட்டிருக்கிறது. இந் நிலை பொறுத்தற்குரியதன்று. இம்மாதிரியான நிகழ்ச்சிகள் பல சபைகளில் நடைபெற்றிருப்பதை நாம் அறிவோம். சில சந்தர்ப்பங்களில் இம்மாதிரி முறைதவறி நிகழ்ச்சிகள் நடக்கும்போது அதனைக் கண்டித்து நமது குமரனிலும் செய்திகள் வெளிவந்துள்ளன. இத்துறையில் தனிகர்கள் ஏராளமான பொருள் செலவிட்டுக் கச்சேரிகள் நடத்தி இன்புற விரும்புகின்றனர். ஆனுல் அவர்கள் செவிக்குப் பார்ப்பன வித்வான்களே வந்து புக முடிகிறதன்றிப் பார்ப்பன ரல்லாத வித்வான்கள் பெயர் லகுவில் வர முடிகிறதில்லை. ஆனுல் பார்ப்பன ரல்லாதாரின் பெருமைகளை அறியும்படியான சந்தர்ப்பம் வந்தாலும் செல்வர்களின் புத்தியை மிரட்டிப் பார்ப்பன வித்துவான்களை வரவழைக்க ஏற்பாடு செய்தல் சர்வ சாதாரணமாகிவிட்டது. பார்ப்பன வித்வான்கள் பார்ப்பனரல்லாத வித்வான்களுக்கு மதிப்புக் கொடுப்பதில்லை. எவ்வளவுதூரம் அவர்களைத் தாழ்த்தமுடியுமோ அவ்வளவு தூரம் தாழ்த்திவிடுவதில் பின்னடையவில்லை ராஜவாத்தியப் பயிற்சியுள்ள பல பார்ப்பன ரல்லாத வித்வான்களுடன் பல பார்ப்பன பக்கவாத்திய வித்வான்கள் இருந்து கச்சேரி நடத்த ஒருப்படுவதில்லை. பார்ப்பன ரல்லாத பக்கவாத்திய வித்துவான்களிற் சிலரும் பார்ப்பன ரல்லாத ராஜவாத்தியத்துக்குத் துணைநின்று கச்சேரி நடத்த இணங்குவதில்லை. காரணம் பார்ப்பன வித்துவான்களின் கொடுமைக்கஞ்சுவதேயாகும்

இம்மாதிரியான நிகழ்ச்சிகளை நமது வித்துவான்கள் மூலம் கேள்விப்பட்டதுடன் சில சந்தர்ப்பத்தில் நாம் நேரிலும் அறிந்துள்ளோம். எனவே பார்ப்பனரல்லாத சங்கீத வித்வான்களின் உயர்நெறி கருதி சங்கீத மகாநாடொன்றை ஈரோட்டில் கூட்ட வேண்டிய தவசியமாகின்றது. பார்ப்பனரல்லாத வித்வான்கள் சிலர் விரும்பியபடி செங்கற்பட்டில் சீர்பெற சங்கீத மகாநாடு நடைபெற முடியாது போயிற்று. ஆனுல் இவ்வாண்டு ஈரோட்டில் சங்கீத மகாநாடு மிகுந்த வெற்றியுடன் நடைபெறுமென்று தெரிகிறது. சிறந்த சங்கீதப் பிரியர்களான திரு. நஞ்சப்பக்கவுண்டர், ஏ. ஆர். சிவானந்தம், ராம. சுப்பிரமணியம் போன்ற அன்பர்கள் முன்னணியில் நிற்கின்றனர். வித்வான்கட்கும் பிரதிநிதிகட்கும் வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கப்படுமென்று நாம் சொல்லவேண்டியதில்லை.

தென்னாட்டிலுள்ள பார்ப்பனரல்லாத சங்கீத வித்வான்கள் யாவரும் ஈரோட்டில் கூடி வேண்டிய நலன்களைப் பெற முயலுதல் வேண்டும். சிறந்த இச்சந்தர்ப்பத்தை இழந்துவிடக் கூடாதென்று தெரிவிக்க விரும்புகிறோம். ஐயர்மார்களின் கீழ்ப் பதுங்கிப் பதுங்கிப் பெற்றபயன் இழிவைத் தவிர வேறொன்றுமில்லை. திரு. ராம. சுப்பிரமணியன் வெளியிட்டுள்ள சங்கீத வித்வான்கள் பட்டியலைப் பார்க்கும்போது சங்கீத உலகில் ஆர்வமுள்ள அன்பர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். இத்தனை பார்ப்பனரல்லாத சங்கீத வித்வான்கள் இருக்கிறார்களா என்று நினைக்கிறார்கள். இவர்களில் மிகச் சிலர் தவிர மற்றவருடைய பெயரைப் பலரறியவில்லை. காரணமென்ன? ஜனங்களுக்கு எடுத்துக்கூறுவாரிற் பெரும்பாலார் ஐயர்மாராக இருப்பதேயாகும். மேலும் பார்ப்பனரல்லாத வித்வான்களில் சிறந்தவர்கள் கீழுள்ளவர்களை விரும்பப் பின் வாங்குகின்றனர். பைத்தியக்கார விசுவாமித்திரன் வசிஷ்டர் வாயினுல் 'பிரமரிஷி' என்று சொல்ல வேண்டுமென்று விரும்பினுனென்பது போல, பார்ப்பன வித்வான்களின் வாயினுல் தங்களைச் சிறந்த வித்வான்களென்று கூற விரும்புவதும் ஒருகாரணமாகும். இம்மாதிரியான சில மயக்க உணர்வு நமது வித்வான்களுடைய மனப்பான்மையாக இராதபடி செய்தலவசியமென்று கருதுகிறோம். இச்சந்தர்ப்பத்தைச் சரியாக உபயோகிக்க வித்வான்களும் பொதுஜனங்களும் முன் வந்தால் தென்னாட்டில் பார்ப்பனரல்லாத சங்கீத வித்வான்களின் புகழ் சாணையிட்ட வயிரமணியாகத் திகழுமென்பதிலையமில்லை. ஐயர்கள் தங்கள் தகுதிக்கேற்ற ஸ்தானங்களிலமருவார்களென்பது திண்ணம்.

## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0—௨—0 |
| சென்னை பங்குனி மீ நடப்பு வட்டி | 0—௪௨—௧ |
| இரங்கூன் உண்டியல் வட்டம் | 0—௮—0 |
| பவுன் விலை | ௧௬—௧௧—௯ |
| வெள்ளிக் கட்டி | ௫௯—௧௨—0 |

**விருந்து:**—கடந்த புதன்கிழமை இரவு ௮ மணிக்கு நல உரிமைத் தொண்டர் சங்கத்து விளம்பர அதிகாரி திரு. செல்லியான் அவர்கள் கோப்புடைய நாயகி வித்தியாசாலை ஆசிரியர் மாணிக்கவாசகம் அவர்களுடைய திருமணத்தை முன்னிட்டு ஓர் 'டின்னர்' நடத்தினர். ஏராளமான நண்பர்கள் விஜயம் செய்திருந்தனர்.

**பெண்கள் கூட்டம்:**—அவ்விருந்து முடிந்ததும் சுமார் ௯ மணிக்கு தெற்குத் தெருவில் ஓர் பெண்கள் கூட்டம் நடைபெற்றது. ஏராளமான பெண்கள் கூடியிருந்தார்கள். திரு. அ. பொன்னம்பலனுர் பெண்கள் துநிலை யென்ற பொருள் பற்றி சுமார் ஒருமணிநேரம்பேசினர்.

**பிரிவுபசார விருந்து:**—சென்ற திங்கட்கிழமை யன்று பிற்பகல் ௪ மணிக்கு குமாருதவியாசிரியர் திரு. ஆ. சுப்பையா அவர்கள் தம் விவாகத்தின்பொருட்டு ௩ மாத ரஜாவில் சொந்த நாட்டிற்குப் போவதை முன்னிட்டு குமரன் காரியாலயத்தார் ஓர் விருந்து நடத்தினர்கள். இவ்வூர் பிரமுகர்களில் பலர் அவ்வமயம் விஜயம் செய்திருந்தனர்.

**காலண்டர்:**—ஹிந்து மதாபிமான சங்கத்தின் பிரமோதூத ஆண்டு காலண்டர் வரப்பெற்றோம். மாதம் ஒன்று வீதம் ௧௨ மாதங்கட்குப் பன்னிரண்டு இதழ்களுடன் அழகான பல கலர்களில் பல சித்திரப் படங்களுடனும், விசேஷ நாட் குறிப்புடனும் வழக்கம்போல் அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கத்தினர்கட்கு மட்டும் இலவசமாக வழங்கப்படுவதாக அறிவிக்கப்பெறுகிறது.

**முனிஸிபல் கூட்டம்:**—அடுத்த திங்கட்கிழமை அதாவது ஏப்ரல்-மீ ௨௮-உக்கு சித்திரை-மீ ௧௬-உயாகிய நிறைந்த அமாவாசைப் புண்ணிய தினத்தன்று மாலை ௪—௩0-க்கு காரைக்குடி முனிஸிபல் சாதாரணக்கூட்டம் நடைபெறும். அநேக முக்கிய விஷயங்கள் இந்த அமாவாசைக் கூட்டத்தில் வாதத்துக்கு வருமாதலால் பொது ஜனங்கள் ஏராளமாக வரக்கூடுமென்று தெரிகிறது.

## இரண்டாவது சுயமரியாதை மகாநாடு.

மே மாதம் ௨௪, ௨௫, ௨௬, ௨௭ தேதிகளில் ஈரோட்டில் நடக்கப்போகும் சுயமரியாதை மகாநாடு முதலியவைகளுக்கு வேண்டிய காரியங்கள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. பம்பாய் திரு எம். ஆர். ஜயக்கர் அவர்கள் மகாநாட்டுத் தலைமை வகிக்க ஒப்புக் கொண்டு தனது சம்மதத்தையும் தயவுடன் தந்தியில் தெரிவித்து விட்டார். பந்தல் வேலைகள் பகுதிக்கு மேலாக முடிந்திருக்கின்றன. வாய்க்காலில் தண்ணீர் இல்லாத காலமானதால் தனித் தண்ணீர்க்குழாய்கள் பல இடங்களில்வைக்கப்பட்டுவருகின்றன. ஒரே தடவை ௧,௫00 பேர்கள் உட்கார்ந்து சாப்பிடும்படியாக சாப்பாட்டுப் பந்தல்களின் வேலை நடக்கிறது. விவசாய கைத்தொழில் கண்காட்சிக்கு ஒரு பெரிய மைதானம் ஒதுக்கிவிடப்பட்டிருக்கின்றது. மகாநாடு கொட்டாய் காம்பவுண்டில் ௪0 கடைகள் வரை வைக்க கொட்டாய்கள் போட்டு அறைகள் தடுக்கப்பட்டிருக்கின்றன. உயர் திருவாளர்கள் காரைக்குடி சொ. முருகப்பர், ராமசுப்பிரமணியன், சிவாநந்தம் முதலியவர்கள் வந்து சங்கீத மகா நாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொண்டு இருக்கிறார்கள். தென்னாட்டு பொறுக்குமணிகள் மகா நாட்டில் ஒருங்கே காணப்பட்டு சங்கீத மழை பொழிவார்கள். திருவாளர்கள் கைவல்ய சாமியார், காளியப்பன், பல்லடம் இராமசாமிப்பிள்ளை, வேங்கடாசலம் முதலியவர்கள் பந்தல் வேலைகளையும் கடிதப் போக்குவரத்துகளையும் கவனித்து வருகிறார்கள். திருவாளர் எஸ். ராமநாதன் காரைக்குடி சின்னையா ஆகியவர்கள் சாமான்வாங்க ஈரோட்டிலிருந்து சென்னைக்குச் சென்றிருக்கிறார்கள்.

## தந்திச் செய்தி.

பினங்கு, ஏப்ரல் ௨௩-௨

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்றைம்பத்தைந்து |
| ஈயம் விலை | எண்பத்துமூன்று |
| ரப்பர் விலை | முப்பத்துமூன்று |

இரங்கூன் ஏப்ரல் ௨௩-௨

| | |
|---|---|
| ரயில் நெல் | ௧௬௫, ௧௬௭ |
| படகு நெல் | ௧௬௮, ௧௭௨ |
| மீடான் | ௪௩௫, ௪௩௭,௮ |
| வெள்ளிலை | ௪௧௫, ௪௨௨,௮ |
| சிறியமில்லரிசி | ௪௨௭, ௪௩0 |

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகபட்டினத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் பிரயாணமாகும் விபரம் வருமாறு:—

| கப்பல். | புறப்படும்தேதி |
|---|---|
| எல்லங்கா | ஏப்ரல் ௨௯ |
| ராஜுலா | மே ௪ |
| எல்லங்கா | ,, ௧0 |
| ரோஹனா | ,, ௧௮ |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகபட்டினம் வந்து சேரும் விபரம் வருமாறு:—

| கப்பல். | வந்துசேருந்தேதி |
|---|---|
| ரஜுலா | ஏப்ரல் ௨௪ |
| எல்லங்கா | மே ௬ |
| ரோஹனா | ,, ௮ |
| எல்லங்கா | ,, ௨0 |

கப்பல்கள் புதுச்சேரியிலிருந்து செய்கோன், சிங்கப்பூர் முதலியவிடங்களுக்குப் பிரயாண மாகும் விபரம் வருமாறு:—

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| சாண்டில்லி | மே ௧௬ |
| காம்பெயிஸ் | ஜூன் ௧௧ |



(௬-ம் பக்கத் தொடர்ச்சி.)

கவுன்ஸிலர்கள் நம்முடைய நன்மைக்கே அமைந்திருக்கின்றார்கள். கவுன்ஸிலும் நம் சுகத்திற்கு அமைக்கப் பெற்றதே. அங்கிருக்கும் தலைவர் நம்முடையவழியரே யாவர். இக்கருத்து ஒவ்வொருவர் மனத்திலும் திகழ வேண்டும். அப்படியானுல் வழிவில்லை; கலகமில்லை; சண்டையில்லை. அல்லாமல் தன் வீட்டிலே ஏராளமான பணம் இருப்புப் பெட்டியிலிருக்கின்ற மமதையினுல் பட்டுத்துல்லாவும் பட்டுச் சட்டையுமணிந்து பெருமை பாராட்டித் திரிவதென்றால் அது பொருந்தாது. இவ் வூரில் நல்லவேர் சக்கசில்லை. பெரிய பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்களெல்லாம் வெட்கமின்றி வெளியில் புருஷர்கள் நடமாடு மிடங்களில் வந்து உட்காரவேண்டியவர்களாயிருக்கின்றார்கள் என்பதை மறைப்பதற்கில்லை. நல்ல காற்று உட்கொள்வதற்கில்லை. எங்கும்சப்பாத் துக்கள்ளிகள் நிரம்பிக்கிடக்கின்றன. குடி தண்ணீர் வசதி எட்டுணையுமில்லையென்பது உலகறிந்த விஷயம். இருக்கிற பச்சைத்தண்ணீரும் சாக்கடைத் தண்ணீருங்கூட பன்றி கிடந்துருளுவதற்கே பயன்படுகின்றது. நான் நேரில் சில குளங்களில் மலக்கட்டி மிதக்கக்கண்டேன். அந்த தண்ணீரைத்தான் வைதீகப் பார்ப்பனர் தங்கள் அர்ப்பண முதலிய காலை மாலைக்கடன்களுக்கு உபயோகிக்கின்றார்கள். சிவபக்தர்களும் செல்வந்தர்களும் கூட இவ்வாபாசக்குளத்து நீரைத்தான் புண்ணிய தீர்த்தமென்று கருதி பய பக்தியோடு சென்று ஸ்நானம் செய்கின்றார்கள். இந்த நாடு மிக மிகச் சூடான நாடு. இவ்வூரை முதலில் வந்தடைகின்றவனுக்கு எங்கும் காணமுடியாத கொப்புளங்கள் காண்கின்றன. என்ன செய்த போதிலும் அவைகள் மாறியபாடில்லை. சந்தனத்தை பலம் பலமாகத் தேய்த்தாலும் கொப்புளங்கள் வெளியே தான் கிளம்புகின்றன. ஆகவே ஊர் இப்படியிருக்கின்ற நிலையில் தலைவர் விசேஷ கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

நானிங்கு முனிஸிப்பாலிட்டியின் ஊழலைமட்டும் எடுத்துக் கூறி வெளிப்படுத்த வரவில்லை. கவுன்ஸிலர்களைத் தட்டி எழுப்பி ஆவேச மூட்டவே முயலுகின்றேன். தலைவரவர்களும் தன் பொறுப்பையுணர்ந்து நேரான வழியில் உழைக்க வேண்டுமென்பது எனதவா. அவர் உடனே விழித்து வேண்டுவன செய்யாது உறங்குவாரானுல் சற்றும் தாமதியாது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவருவதுதான் ஏற்ற செய்கை. நானிப்போது உங்கள் நலத்தைப் போற்றுகின்றவனுகவும் வரி கொடுப்போனுகவும் நீதிக்கு ஒழுங்குக்கு முறைக்குத் தாசானுதாசனுகவுமிருந்து பேசுகின்றேன். பொறுப்புடைய எவரும் அவ்வண்ணமே தான் நடந்துகொள்ளவேண்டும். உலகில் எவரும் இன்னொருவருக்குப் பயந்து வாழலாகாது. தலைவருடைய கட்சியை நாடியோ அதிகாரத்தைப் பயந்தோ நியூட்ரலாகவும் சார்பாகவும் சிலரிருக்கின்றார்களென்றால் நிச்சயமாகவும் அவர்கட்கு சுயமதிப்பில்லையென்றே சொல்லுவேன். நான் கவுன்ஸில் ஹாலைச் சென்று பார்த்தபோது பற்பலர் இடையில் வேட்டியைக் கட்டி ஒதுக்கமாக நிற்கக் கண்டேன். இவர்கள் அவ்வாறு நிற்கவேண்டிய அவசியமில்லவேயில்லை. மேலதிகாரிகளுக்கு ஒரு கடிதமெழுதினுலும் அவர் நமக்கு தங்கள் பணிவுள்ள ஊழியன் என்று தான்பதிலெழுதுவார் அப்படியானுல்முனிஸிபல் தலைவர் எவ்வளவு? நம்நாட்டில் அறியாமை அதிகம். எனவே லஞ்சம் வாங்குவது பெருகிவிட்டது. அரசன் முதல் ஆண்டி வரையிலும் நேரான வழியில் நடப்பதில்லை. அவர்கள் தம் வீட்டுச் சொத்தையும் அதிகாரத்தையும் வெளியே காட்டுகின்றார்கள். எதேச்சாதிகாரம் சற்றும் ஒழுங்காகாது. நம் நாட்டு மக்களுக்காகவே தாசில்தார், கலக்டர், மாஜிஸ்திரேட் முதலியோரிருக்கிறார்கள். அவர்களுடைய அதிகாரமும் நமக்குத்தெரியும். அவைகள் அனாவசியமாகச் செலவிடப்பட்டால் எதிர்க்க என்றும் தயாராக இருக்கின்றோம். அவர்கள் நமது பந்துவாகவுமிருக்கலாம்? எனக்கும் இந்நகரசபைத் தலைவருக்கும் எவ்வித பகைமையும் கிடையாது. எனினும் அவர் எங்களை மறுத்தார்? என் பத்திரிகைநிருபர்களை மறுக்கிறார்? என்றால் நிருபர்கள் உள்ளே இருந்தால் தலைவரின் வண்டவாளங்கள் வெளிப்படுகின்றன.

அங்கு நடக்கின்ற ஊழல்கள் பல. ஒரே சமயத்தில் ௧0 பேர்கள் ஒன்றாகப் பேசுகின்றார்கள். கேட்போருக்கு ஒன்றும் புரிவதில்லை. இருக்கிறஇருகாதைக்கொண்டு எத்தனை பேச்சைக் கேட்கமுடியும்? சிரித்தாலும் எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து சிரிக்கின்றார்கள். மினிட்புக் வாசிக்கின்ற வழக்கத்தைக்காணமுடியாது. இப்படி இருக்க ஏதோ ஒரு நிருபர் தப்பிதமாக ரிப்போர்ட்டுக் கொடுத்துவிட்டார் என்று வைத்துக் கொண்டாலுங்கூட அது யாருடைய தப்பிதமென்று கேட்கின்றேன்.

ஒரு பத்திரிகை நிருபர் மறுக்கப்பட்டாரென்றால் அஃது ஜனங்களையெல்லாம் மறுத்ததற்கு ஒப்பாகும். தொழிலாளர்கள் இவ் வூரில் மிக வாட்டமடைகின்றார்கள். அதனைக் கவனித்தபாடில்லை. மோட்டார் வண்டி இவ்வூரில் எமனுக ஓடுகின்றது; அதிலும் அவர் கவனம் சென்றதாகக் காணவில்லை. ரோடிலெல்லாம் தூள் பறப்பது எவராலும் அளவிட்டுக் கூற வியலாது: அதனையும் தலைவர் அறிந்துகொண்டதாகத் தெரியவில்லை. மக்கள் நடமாடும் இவ் வூர் ரோடுகளில் தார் போடவேண்டுமா என்னவென்று ஆலோசனை செய்ததாக இன்னும் விளங்கவில்லை. இவற்றைத் தவிரவும் எத்தனையோ சீர்திருத்தங்கள் செய்ய வேண்டுவதுண்டு. இதனை யெல்லாம் ஆராய்ந்து பார்க்கும்போது நிச்சயமாகவும், இத் தலைவருக்கு நகரசபையை நடத்தவே தெரியாதென்று தோற்றுகின்றது.

நான் சென்ற முனிஸிபல் கூட்டத்திற்கு திராவிடன் நிருபர் என்றமுறையில் போனேன். போனதும் தலைவர் என்னிடம் அத்தாரட்டி கேட்டார். நான் திராவிடன் நிருபர் என்பது எல்லோருக்கும் தெரியுமென்றும், வேண்டுமானுல் வருகிற கூட்டத்தில் அத்தாரட்டி காட்டுகின்றேன் என்றும் பதில் கூறி கார்டு ஒன்றைக் கொடுத்தேன். அவர் இவற்றை யெல்லா மேற்றுக்கொள்ள மறுத்து என்னை விசிட்டர் காலரிக்குப் போகக் கூறினர். இதன் காரணமென்னவென்று நினைக்கின்றீர்கள்? தலைவரின் வண்டவாளங்களை வெளியாக்கி விடுவேனென்பதற்கே.

இப்படிப் பயந்து நேர்கேடாக என் அதிகாரம் செலுத்தவேண்டுமென்று தெரியவில்லை. தன்னுல் சரியாக வேலையைப் பார்த்துக்கொள்ளமுடியாதென்றால் தன் தலைப்பாகையை எடுத் தெறிந்துவிட்டு என் விலகிக்கொள்ளலாகாது? தன் உதவிக்காக அன்று போலீசு இன்ஸ்பெக்டரைத் தலைவர் கூப்பிட்டிருந்தாராம். அது எதற்காக என்று கேட்கிறேன்? எப்பொழுது அநீதி நிகழ்கின்றதோ அப்பொழுது அதனை ஒழிக்கவேண்டும். தலைவர் முற்றிலும் ஒவ்வாத முறையில் அதிகாரஞ் செலுத்துகிறாரென்றால் அவரை அப் பதவியிலிருந்து வெளியேற்ற நமக்கு வலிமையுண்டு. இது திரு. A. V. PL. சிதம்பரஞ் செட்டியாரைப் பற்றிய மட்டிலுமன்று. பொதுவாக எந்த மனிதன் தலைவனுக வந்து இவ்வளவு யதேச்சாதிகாரம் பண்ணினுலும் மக்கள் நலனுக்கும் உரிமைக்கும் கேடு சூழக் கருதினுலும், நாம் நம் கடமையை ஆற்றவதில் ஏற்படு மின்ப துன்பங்களுக்காகப் பயப்பட வேண்டிய அவசியமில்லை.

பத்திரிகை இலேசான ஸ்தாபனமன்று. அதற்கு இருக்கும் வலிமை, சக்தி, பலம் அளப்பரிதாகும். நன்றாயோசித்து ஆராய்ந்து பார்த்தால் தற்கால உலகம் முழுதும் பத்திரிகையினுலேயே நடைபெறுகின்றது என்பது விளங்கும். பத்திரிகை இன்றேல் அந்நிய நாட்டு நிகழ்ச்சிகள் அறியப்படமுடியா. பத்திரிகை இன்றேல் இன்றுஉலகம் எப்படி இருக்கின்றதென்பது மூடுமந்திரமாகவிடும். பத்திரிகை இன்றேல் வீட்டிலிருந்துகொண்டு தலைவராக அதிகாரம் செலுத்த முடியாது. எனவே பத்திரிகை நிருபரை இடமாற்றியது எவ்வளவு குறுகிய நோக்கம் என்று யோசித்துப் பாருங்கள்.

இவ்வூர் ஜனங்கள் இதுவரையிலும் முனிஸிப்பாலிட்டியில் தலையிட்டதாகத் தெரியவில்லை. கூட்டம் எந்த நாளென்று அறிந்த உடனே "டாம் டாம்" போட்டு எல்லா ஜனங்களுக்கும் அறிவிக்க வேண்டும். ஏராளமான ஜனங்கள் ஒவ்வொரு மீட்டிங்கிற்கும் பிரசன்னமாக வேண்டும். அப்படியானுல்தான் சம் குறைகள் நிவர்த்தி செய்யப்பட்டு நகரம் முன்னேற்றமடையும்.

## முனிஸிபல் தலைவர்மீது கண்டனம்.

தற்போதைய முனிசிபல் தலைவர் வீண் ஆடம்பரம் காட்டுகின்றார் என்பதற்குப்பல சான்றுகள் உள. அவற்றில் முக்கியமானது டவாலிக்காரரைக் கையாளும் முறையாகும். தலைவர் எங்கெங்கு போகிறாரோ அங்கெல்லாம் இரண்டு டவாலிக் காரர்கள் கைகட்டி வாய் பொத்தி முன் போகின்றார்கள். இவ்விருவரும் தலைவர் என்ற முறையில் அவர் இருக்கும்போதுமட்டிலும் தொண்டு புரிய கடமைப்பட்டவரா அல்லது திரு ஆ. வி. பழ. சிதம்பரம் செட்டியாராக கல்யாண வீட்டிற்குப் போகும் போதும் சேவகம் செய்ய கடமைப்பட்டவரா என்று கேட்கின்றேன். அவருக்கு கவுன்ஸில் ஹாலில் துணையாக ஓர் பார்ப்பனர் இருக்கிறார், இவர் உடனில்லாமற் போனுல் தலைவர் ஒருவாறு நல்லவராக நடந்து கொள்ளுவார்போலதோற்றுகிறது.

நான் இரண்டு மூன்று கூட்டங்களைச் சென்று பார்த்தபோது தலைவரும் அந்தப் பார்ப்பன கனவானும் நடந்துகொள்கின்ற முறை என்மனத்தில் ஓர் கதையை ஞாபக மூட்டிற்று. அது வருமாறு:—ஒரு மனைவி தன் வீட்டில் ஓர் தேள் வரக்கண்டாள். உடனே புருஷனைக் கூப்பிட்டு ஓர் விளக்கு மாற்றை கையில் கொடுத்து தேள் போகின்றது தேள் போகின்றது என்று கத்தினுள். உடனே அந்த கணவன் ஓடிச் சென்று பார்த்துவிட்டு மனைவியை நோக்கி "நீ, இந்த தேள் எங்கும் ஓடிவிடாதபடி பார்த்துக்கொள்; நான் இதனைக் கொல்ல வெளியில் சென்று புருஷர்களிருந்தால் பார்த்து வருகிறேன்" என்றான். இதனைக் கேட்டதும் மனைவி 'நீங்கள் புருஷரல்லவோ' என்றாள். என்றதும் ஓ! ஓ!! மறந்துவிட்டேன்; நானே கொல்லுகின்றேன் என்றானும்.

என்றதேபோல் தலைவருக்கு அவர் தலைவர் என்பதை அடிக்கடி அந்தப் பார்ப்பனர் ஞாபகமூட்டி ஆலோசனைகூறி ஆட்டிவைக்கின்றார். தலைவரும் அவருடைய வார்த்தைக்கு செவிசாய்க்க நடைமுறை நடந்து வருகிறது. இதனுலேயே பெரும்பாலும் குழப்பமும் கூச்சலும் விளைகின்றன என்னலாம்.

கனவான்களே! இவ்வாறு ஒழுங்கு கேடான முறைகளை நாம் ஏற்றுக்கொள்ளலாகாது. நமக்கு பொறுப்பும், செயல்வன்மையும், நீதியுமுடைய கவுன்சிலும் தலைவருமே வேண்டும். அவற்றை நமக்குப் பெற்றுக்கொள்ளமுடியவில்லையென்றால் இருப்பதை ஒழித்துவிட்டு வேறு புதிய ஸ்தாபனங்களமைக்கவேண்டும்.

பிறகு தலைவர் அடியில் வரும் தீர்மானங்களை பிரேரேபித்தார்.

### தீர்மானங்கள்.

1 காரைக்குடி முனிஸிபல்கவுன்ஸிலில் தலைவர் ராவ்பகதூர் ஆ.வி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்கள் தமது யதேச்சாதிகாரத்தைச் செலுத்தி, பொது ஜனங்களுடைய நன்மைக்குப் பாதகம் உண்டாகும் விதத்தில் நடந்து கொள்வதை இக்கூட்டம் பலமாகக் கண்டிக்கிறது. இனியேனும் அவர் யதேச்சாதிகாரத்தைச் செலுத்தாமல் பொதுஜனங்களுடைய நன்மையைமட்டும் நாடி கவுன்ஸிலை நடுநிலைமையுடன் நடத்துவாரென இக்கூட்டம் எதிர்பார்க்கிறது.

(2 A) சென்ற முனிஸிபல் கவுன்ஸில் கூட்டத்தில் திராவிடன், குமரன், ஜஸ்டிஸ் பத்திரிகை நிருபர்களை, தகுந்த காரணமின்றி பிரஸ் காலரியிலிருந்து, தமது யதேச்சாதிகாரத்தினுல் வெளியேற்றியது, பொதுஜனங்களுடையவும், வரிகொடுப்போருடையவும் உரிமைகளைப் பாதிக்குமாதலால், இச்செய்கைக்காக கவுன்ஸில் தலைவர் திரு. சிதம்பரம் செட்டியாரவர்களைப் பலமாக இக்கூட்டம் கண்டிப்பதுடன், தமது செய்கைக்காக அவர் இனியேனும் வருந்தி, பத்திரிகை நிருபர்களை அனுமதிப்பாரென்று எதிர்பார்க்கிறது.

(B) சென்ற முனிஸிபல் கூட்டத்தில் ஒரு பத்திரிகை நிருபரைமட்டும் அனுமதித்து, மற்ற ௩ நிருபர்களையும் காரணமின்றி வெளியேற்றிய தலைவரது நடுநிலைமையற்ற பட்சபாதத் தன்மையை இக்கூட்டம் பலமாகக் கண்டிக்கிறது. இனியேனும் தலைவர் நடுநிலைமையாக நடந்துகொள்வாரென எதிர்பார்க்கிறது.

(C) பத்திரிகை நிருபர்களைக் காரணமின்றி அனுமதிக்க மறுத்த தலைவரது செய்கையைக் கண்டிக்க, சென்ற கூட்டத்தில் கவுன்ஸில் ஹாலைவிட்டு வெளியேறிய அங்கத்தினர்களை இக் கூட்டம் பாராட்டுகிறது.

(3) பொதுஜன நன்மைக்கு விரோதமாகவும், நடுநிலைமையின்றியும் யதேச்சாதிகாரத்தைச் செலுத்தி கவுன்ஸில் விஷயங்களை நடத்தும் தலைவர் திரு. ஆ.வி. பழ. சிதம்பரம் செட்டியாரவர்களை முனிஸிபல் தலைவராக கவர்ன்மெண்டார் நியமித்தது பற்றி இக் கூட்டம் வருந்துகிறது; இனியேனும் இம்மாதிரி தலைவர்களை நியமிக்கக் கூடாதென கவர்ன்மெண்டாரைக் கேட்டுக்கொள்ளுகிறது.

திரு. வி. ஜி. நாயர் அவர்கள் எழுந்து இவ்வாறு பேசினர்.

அன்பர்களே!

நானிங்குள்ள பொது ஸ்தாபனங்களைப் பற்றிக் குறைகூறிப் பேசவரவில்லை. சென்ற செவ்வாய்க்கிழமை தலைவர் அநீதியாகவும் ஒழுங்கு கேடான முறையிலும் பத்திரிகை நிருபர்களை Reporters gallery யிலிருந்து வெளியேற்றியதைக்கண்டிக்க மட்டிலுந்தான் வந்திருக்கின்றேன். நிருபர்களின் உரிமைகளைப் பறித்துக்கொண்டது பொது ஜனங்களின் உரிமைகளை எடுத்துக் கொண்டதற்கு ஒப்பாகும். பத்திரிகையென்றால் வெறும் காகிதங்களல்ல. அவைகளே உலகத்தை ஆட்டி வைக்கின்றன.

நான் கடந்தசிலவருடங்களாக இவ்வூரில் பத்திரிகைப் பிரதிநிதியாக இருந்து வருகின்றேனென்பது எல்லோருமறிந்த விஷயமாகும். தலைவர்முதல் சேவகர்வரையிலும் இவ் விஷயத்தை அறிவார்கள். அப்படியிருக்க என்னைமறுத்தது எவ்வளவு முறைகேடென்பதனை நீங்களே உணர்ந்து பாருங்கள். அன்று ஹாலில் எனக்கும் தலைவருக்கும் நடந்த சம்பாஷணையில் தலைவர் பேசியது முற்றிலும் சட்டத்திற்குப் பொருந்தாதது என்பது எனக்குத் தெரிந்தது. என்றாலும் அவர் பொதுஜனப் பிரதிநிதி என்பதற்காகவும் அவர்கட்குக் கொடுக்கும் மதிப்பு உங்களுக்குக் கொடுத்ததாகுமென்று நான் எண்ணியிட்டதாலுமே இடம்விட்டு நீங்கினேன். ஆனுல் இப்போது தலைவரைப் பற்றிய உங்களது கருத்து வெளிப்பட்டுவிட்டதால் பத்திரிகைப் பிரதிநிதியின் உரிமைகளுக்கு என்னுயிரை செலவிட்டேனும் போராடுவேனென்பதனைத் தெரிவித்துக்கொண்டு இத் தீர்மானங்களை ஆதரிக்குமாறு உங்களிடம் வேண்டிக்கொள்ளுகிறேன்.

பிறகு எல்லோரும் தீர்மானத்தைஆதரிப்பதற்கறிகுறியாக கைகொட்டினர்கள். தலைவர் திரு. மெய்யப்பா அவர்கள் எழுந்து செட்டிநாடு காரைக்குடி வாசிகளின் கடமை என்னும் பொருள்பற்றி முனிஸிபல் தலைவர் செயலைப் பல மேற்கோளுடன் பலமாகக் கண்டித்துப் பேசினர். சுமார் 9 மணிக்குக் கூட்டம் கலைந்தது.

### தேசீயக்கொடி பறிமுதல்.

பாடலிபுரம் உப்பு மறுப்புப்படை வீரர் மிக மும்முரமாக சட்டத்தை மீறிவருகின்றார்கள். இதுவரையிலும் சுமார் ௩௦௦ இடங்களில் உப்பு செய்யப்பட்டு விட்டது. ஏப்ரல் ௧௭-க்தேதி கைதியான தொண்டர்கள் ௧௮-க்தேதி காலையில் விடுதலை கொடுக்கப்பெற்றார்கள். எனவே போலீசார் கைது செய்வதை விட்டு விட்டு தொண்டர்கள் கையிலுள்ள தேசியக் கொடியை மட்டும் பறிமுதல் செய்வதென தீர்மானம் செய்திருக்கிறார்கள் ௧௮-க்தேதி ௫ முறை கொடிகள் பலாத்காரமாய் பிடுங்கப் பெற்றன.

## குமரன் காலெண்டர்.

நமது கம்பெனியிலிருந்து பிரமோதூத வருடக் காலண்டர் வெளியிடப்பட்டிருக்கிறது. இவைகள் நமது வாடிக்கைக்காரர்களுக்கு இலவசமாகக்கொடுக்கப்படும். வெளியூரிலுள்ளவர்கள் தபாற் செலவுக்காக அரையணு ஸ்டாம்பு அனுப்புதல் வேண்டும்.

மானேஜர்,
தனவைசியன் கம்பெனி லிமிடெட், காரைக்குடி.

## சிட்டகாங் கலவரம்.

### ஏழுபேர் இறந்தனர்.

#### ரயில்வண்டி கவிழ்த்தப்பட்டது.

சிட்டகாங்கில் பெருங் கலகம் நடந்துகொண்டிருக்கின்றது. டெலிபோன் காரியாலயங்கள் எரிக்கப்பட்டும், போலீசாயுதங்கள் தகர்க்கப்பட்டும், தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டுமிருக்கின்றன. ஏழுபேர் கொலை செய்யப்பட்டு விட்டார்கள். போலீசார் எங்கும் காவல் செய்து வருகின்றனர். மெயில் வண்டி தண்டவாளத்தை விட்டு கவிழ்த்தப்பட்டது. தந்திகள் அறுக்கப்பட்டுவிட்டபடியால் ஆகாயத் தந்திகளிலேயே செய்திகள் அனுப்பப் பெறுகின்றன.

ஏப்ரல் ௧௯-ம் தேதி லார்டு இர்வினின் கையொப்பத்தோடு ஓர் விசேஷ கஜட்டு வெளிவந்திருக்கின்றது. அது வங்காளக் கவர்ன்மெண்டிற்கு விசேஷ அதிகாரம் அளித்துள்ளது. சிட்டகாங் கலவரத்தைப் பற்றிய அரசாங்க அறிக்கை வருமாறு:—

சிட்டகாங்கில் நேற்றிரவு நடந்த கலவர சம்பந்தமாகக் காலை முதல் பல தந்திகளும் அவற்றிற்கான மறுப்புகளும் உலவின. அதுபற்றி உத்தியோக அறிக்கையொன்று வெளியிடப்பட்டிருக்கிறது. அது கூறுவதாவது:—௧௮, ௧௯-ம் தேதி இரவுகளில் கலகக்காரர்களால் ரெயில்வேயும் போலீஸ் ஆயுதச் சாலைகளும் தாக்கப்பட்டு நெருப்பு வைத்து எரிக்கப்பட்டன வென்பதைக் கவர்ன்மெண்டார் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகின்றனர். கலகக்காரர்களின் தொகை சுமார் ௧00 ஆக இருக்குமென மதிப்பிடப்பட்டிருக்கிறது. விவரங்கள் பூரணமாகத் தெரியவில்லை. ஆனால் தற்பொழுதுவரை கிடைத்துள்ள தகவலிலிருந்து ஒரு சார்ஜெண்ட் மேஜரையும் ஒரு ஆங்கிலோ இந்தியரையும் ௪ இந்தியர்களையும் கலகக்காரர்கள் சுட்டுக்கொன்றுவிட்டார்களென்று தெரிகிறது. தற்பொழுதுவரை கிடைத்துள்ள தகவல்களிலிருந்து எல்லா சிவிலியன்களும் ரெயில்வே ஊழியர்களும் அவர்கள் குழந்தைகள் இவர்களுடன் பத்திரமாக இருப்பதாகத் தெரிகிறது. அவர்களுக்குப் படகுத் துறைகளில் இடவசதி அளிக்கப்பட்டிருக்கிறது. போலீஸாரும் அசல உதவிப்படையினரும் கலகக்காரர்களைச் சூழ்ந்துகொள்ள முயன்று வருகின்றனர். லெப்டினெண்ட் கர்னல் டாலாஸ்மித்தின் தலைமையில் கிழக்கு எல்லைப்புறத் துப்பாக்கிப் படையின் கூட்டமொன்று இன்று காலை சிட்டகாங்கிற்கு அனுப்பப்பட்டது. அவர்கள் ௨௦-தேதி காலை அங்கு போய்ச் சேருவார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனராலும் அப்படையுடன் சென்றிருக்கிறார். தந்திக் கம்பிகள் அறுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை சரிப்படுத்தப்பட்டுவரப்படுகின்றன. ௧௯-ம் தேதி யன்று சிட்டகாங்கிலிருந்து ௪௦-மைல் தூரத்தில் ஒரு ரெயில்வண்டி தண்டவாளத்தை விட்டகலும்படி செய்யப்பட்டது. இருப்புப்பாதை தடைப்பட்டிருக்கிறது. ஆனால் அப்பிரதேசத்தில் ஜனங்கள் வண்டிமாற ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ரெயில் தண்டவாளத்தை விட்டகன்ற சம்பவம் அகஸ்மாத்தாக நேர்ந்ததா அல்லது கலகக்காரர்களுடைய வேலையின் பயனாக நிகழ்ந்ததா என்பது இன்னும் தெரியவில்லை.

முனிஸிபல்

## தலைவர்மீது வழக்கு.

காரைக்குடி முனிஸிபல் கவுன்ஸிலரான திருவாளர் அ. மு. க. முத்துக்கருப்பன் செட்டியார் ஷை கவுன்ஸில் தலைவர் மீது தேவகோட்டை முனிஸிப் கோர்ட்டில் ஒரு வழக்குத் தொடர்ந்திருக்கிறார். மற்றொரு மெம்பரான என். எஸ். வெங்கட்டராமய்யர் தலைவருடைய சேர்வண்டாக இருப்பதால் செல்லாதென்பது பற்றிக் கேட்ட கேள்விகள் அனுமதிக்கப்படவில்லை. அதைக்குறித்து ஜில்லா ஜட்ஜுக்குச் சேர்மன் மனுச் செய்துகொள்ள வேணுமென்ற விஷயத்தைக் கவுன்ஸிலில் வைக்கும்படி அனுப்பிய தீர்மானமும் கொண்டு வரப்படவில்லை. இந்த உரிமைகள் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்பது வழக்கின் சாராம்சம். வாயிதா ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

### ஸ்ரீமான் பி. ஸி. ராயின் வேண்டுகோள்.

இந்திய வைத்தியர் சங்கத் தலைவராகிய டாக்டர் பி. ஸி. ராய் கிரேட் பிரிட்டனிலுள்ள வைத்திய சபையின் ரெஜிஸ்தரார் ஜனாலுக்கு ஒரு கடிதமெழுதி இந்திய வைத்தியப் பட்டங்களுக்கு களித்திருந்த அங்கீகாரத்தை பிரிட்டிஷ் வைத்தியப் பொது சபை நிறுத்திவிட்டதால் அதைத் தாம் கண்டிப்பதாகவும் அதற்கறிகுறியாக தமது பெயரை குடிபேற்ற நாட்டு வைத்தியர்களது ஜாபிதாவிலிருந்து நீக்கிவிடும்படி தாம் கேட்டுக்கொள்ளுவதாகவும் வேண்டிக்கொள்கின்றார்.

## நோட்டீஸ்.

தேவகோட்டை சப் கோர்ட்டு
1930ஞு O S. நிர். 55.

| | |
|---|---|
| எழுவங்கோட்டை தாலுகா கண்டனூர் குப, ராம. நாராயணன் செட்டியார் | வாதி |
| ஷை யூரிலிருந்து இப்போது ரெங்கூனைச்சேர்ந்த பசுமந்தானிலிருக்கும் தெ. கரு. கருப்பன் செட்டியார் | பிரதி வாதி |

ஷை பிரதிவாதி குப. ராம. மீனாக்ஷி ஆச்சிக்கு 15-6-27உ யில் எழுதிக்கொடுத்திருக்கும் பிராம்சேரி கோட்டை ஷை வாதி பிளிந்த எண்டார்சு பெற்று அதன்பேரில் ரூ 3049-0-3 க்கு ஷை பிராது செய்து 23-6-30உ முடிவுக்கு வாய்தா போட்டிருப்பதில் பிரதிவாதிக்கு ஏதும் ஆக்ஷேபணையிருந்தால் ஷை வாய்தாவில் தெரிவித்துக்கொள்ள வேண்டியது. தவறினால் எக்ஸ்பார்ட்டி செய்து தீர்மானம் செய்யப்படும்.

V. ராமஸ்வாமி அய்யங்கார்
14—4—30 வாதி வக்கீல்
தேவகோட்டை.


## ஸீலிங் தகடுகள்!

துருப்பிடிக்காதது. தீப்பிடிக்காதது. மரத்தினால் செய்வதைவிட மிக நேர்த்தியாகவும், இலேசாகவும், விலை குறைவாகவுமுள்ளது. சித்திரவேலைகள் செய்த பல டிஸைன்களில், பாடி, பார்டர், பிலலர், கார்னிஸ் எல்லாம் ஒரு விலையில் ஸப்ளை செய்யப்படும்.

ராவல் அண்டு கம்பெனி,
16) காரைக்குடி.


ஸுவேச்சானில்

## மகா கும்பாபிஷேகம்.

பர்மாவிலுள்ள ஸுவேச்சான் என்னும் ஊரிலுள்ள பழய ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தைப் புதுப்பித்து வைகாசிமீ ௨௨ காலையில் ௯௨ மணிக்கு மேல் ஒரு மணிக்குள் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடக்குமென்று ஒருவர் அறிவிக்கிறார்.

### புதுக்கோட்டை—காரைக்குடி செக்ஷன் கூட்ஸ் டிராபிக்.

புதுக்கோட்டை காரைக்குடி செக்ஷனில் ஓடும் கூட்ஸ் வண்டிகள் முன்னம் அறிவிக்கப் பட்டபடி புதன்கிழமை, சனிக்கிழமைகளுக்குப் பதிலாக இனி திங்கட்கிழமை, வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே ஓடும் என்று தென்னிந்திய ரயில்வே கம்பெனியார் அறிவிக்கிறார்கள்.

### ஜம்னுதாஸ் மேத்தா கைதியானார்.

ஏப்ரல் ௧௯-ந்தேதி கல்யாணியில் நடைபெற்ற ஓர் கூட்டத்தில் பேசிக்கொண்டிருக்கும்போது திரு. மேத்தா என்ற மாஜி சட்டசபை அங்கத்தினர் உப்புவரி மறுப்புப்போரில் கலந்துகொண்டாரென்ற காரணத்திற்காக கைது செய்யப்பட்டார்.

பம்பாய் சத்தியாக்கிரகச் சபையார் நகரின் பல பாகங்களிலும் அஹிம்ஸா தருமத்தை பிரசாரம் செய்வதற்காக கமிட்டிகள் நியமித்துள்ளார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஜனங்களை ஆங்காங்கே உப்பு காய்ச்ச ஏற்பாடு செய்கிறனர்.

### ஆந்திரத் தலைவர்கள் சிறைப்படுத்தப்பட்டனர்.

...லுக ராம்பமூர்த்தி, நின்னதி சத்திய நாராயணா, டாக்டர். பி. சுப்பிரமணியம், காலேவெங்கடராய் இவர்களை உப்புச் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்துகொண்டதற்காக போலீசார் கைது செய்தார்கள். விசாரணையின் போது ஜாமீன் கட்ட மறுத்ததால் தலைக்கு ஒரு வருஷக் காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

### ஜாவேரிபாய் விடுதலை.

கெய்ரா ஜில்லாவில் பிரபலமான தொண்டராகிய திரு. சதுர்புஜஜாவேரிபாய் உப்புச் சட்டப்படி ௬-மாதம் கடுங்காவல் தண்டனை பெற்றிருந்தார். அவர் தேக அசௌகரியத்தை முன்னிட்டு அவரை விடுதலை செய்துவிட்டனர்.


### தலைவலிக்குச் செலவென்ன?

அது ஒரு மணிநேரம் உங்களுக்கு சிறிது அசௌகரியத்தைக் கொடுக்கலாம். ஒருநாள் முற்றும் உங்களை வேலை செய்யமுடியாது செய்து விடலாம். தினமும் பலரைத் துன்புறுத்துவது போல் உங்களையும் கஷ்டப்படுத்தலாம். இச் சுன்பத்தினின்றும் நீங்கள் எதையும் கொடுத்து விடுவீர்களல்லவா? ஆனால்நீங்கள் பெரும் பொருள் கொடுக்கவேண்டாம்—ஒரு புட்டி

லிட்டில்ஸ் ஓரியண்டல்பாமை வாங்குங்கள்.

அது உடனேயே உங்களுக்கு சௌகரிய மளிக்கும். இச் சொற்ப விலையை நீங்கள் கவனிக்கமாட்டீர்களல்லவா? உலகமுற்றும், இந்த ஔஷதம் செல்வாக்குப் பெற்றிருப்பதன் ரகசியம் இதுதான்—44-வருஷங்களாகப் பேர்பெற்றது. எல்லா மருந்து வியாபாரிகளிடமும், ஔஷத சாலைகளிலும் கிடைக்கும். (19)


## நோட்டீஸ்.

தேவகோட்டை
டி. மு. கோர்ட்டு.
1929ஞு S. C. No. 914

| | |
|---|---|
| எழுவங்கோட்டை தாலுகா கல்லலிலிருக்கும் ஆ. த. ந ஆத. சொக்கலிங்கம் செட்டியார் | வாதி. |
| பரமக்குடி டி. மு. கோர்ட்டு ஷரகம் பரமக்குடி தாலுகா சிறுதலைபிலிருக்கும் முத்திருளப்ப பிள்ளை மகன் M R. பூபதிபிள்ளை | பிரதி வாதி. |

வாதிக்குப் பிரதிவாதி 26-10-1929 தேதியில் எழுதிக் கொடுத்திருக்கிற ரூ 200 பிராம்சேரி நோட்டின் பேரில் பிராதுசெய்து ஷை நிம்பராக பயிலாகி தங்களுக்கு பலதடவை சமன் அனுப்பியும் சார்வாகவில்லை தங்களுக்கு சப்டியுட் சர்விஸ்க்கு உத்திரவாகி படிகட்டியிருக்கிறது வாய்தா 10-6-30 தேதி. அன்றுதினம் நீர் ஆஜராகி தங்களுக்குள்ள ஆக்ஷேபணைகளைத் தெரிவித்துக் கொள்ளலாம். அப்படி 10-6-30உ யில் ஆஜராகாவிட்டால் தங்களை எக்ஸ்பார்ட்டி செய்து ஷை நிம்பரை மேல்நடத்தப்படும் என்று அறிவிக்கலாயிற்று.

P. ராமசாமி அய்யர்.
தேவகோட்டை வாதி வக்கீல்.
20—4—30

## இஷ்யூக்களைத் தீர்ப்பதற்கான சமன்.

பாஸின் சப்டிவிஷனல் கோர்ட்டு.

1930, ஸிவில் ரெகுலர் நிர். 19.
யல். ஆர். யம். கே. கடை—வாதி.

ஸி. ஆர். கே. சின்னக்கருப்பன் செட்டியார் — — —பிரதிவாதி.

இராமநாதபுரம் ஜில்லா, சிவகெங்கை சப்கோர்ட்டு ஆதிக்கத்திற்குட்பட்ட பட்டமங்கலம் கருங்குளம் கிராமம், ஸி. ஆர். கே. சின்னக்கருப்பன் செட்டியாருக்கு அறிவிக்கும் நோட்டீஸாவது:—

தாங்கள் வாதிக்கு ரூ 1009-6-6க்கு எழுதிக்கொடுத்திருக்கிற புரோ நோட்டின்பேரில் வியாஜ்யம் ஏற்பட்டு 1930 மே மீ 5-ம் தேதி செவ்வாய்க்கிழமை முற்பகல் 10 மணிக்கு வாய்தா ஏற்பட்டிருப்பதால் ஷை தேதியில் தாங்கள் நேரிலாவது, வக்கீல் மூலமாவது அல்லது அதிகாரம்பெற்ற ஏஜண்டு மூலமாவது அஜராகவேண்டியது. தவறினால் எக்ஸ்பார்ட்டியாகத் தீர்ப்புக் கூறப்படும். தாங்கள் எழுத்து மூலம் ஸ்டேட்மெண்ட்கொடுக்க விரும்பினால் வாய்தா தேதிக்கு நாலு நாளைக்கு முன்னதாக அவ்விதம் செய்யவேண்டும்.

உத்திரவுப்படி
(ஒப்பம்) பாப்பா,
ஹெட்கிளார்க்,
சப் டிவிஷனல் ஜட்ஜுக்காக,
5-4-1930. பாஸீன் (பர்மா)


## WANTED.

Candidates desiring to serve in Government, Railway and Canal Departments. Full particulars and Railway Fare Certificate on 2 annas stamps; apply under registered cover to.
IMPERIAL TELEGRAPH COLLEGE,
Nai Sarak, DELHI.




(௯-ம் பக்கத் தொடர்ச்சி)

„ முத்து கு பழ முருகப்பசெட்டியார்
„ மரு சு சுப்பையா செட்டியார்
சபீ க மு முகம்மது இப்ராஹிம்ராவுத்தர்
ஸ்ரீமதி மரகதவல்லி
திரு. குருசாமி

பாதகமாக ஓட் செய்தவர்கள்.
திருவாளர்களான
என் எஸ் வெங்கிட்டராமய்யர்
தலைவர்

நியூட்ரலாக இருந்தவர்கள்.
திருவாளர்களான
மெ செ ச சிதம்பரம்செட்டியார்
செ. நா. நாராயணன் செட்டியார்
ஈ கு ராமநாதன் செட்டியார்.

தலைவர்—மாறி (பிறகு) என்ன செய்ய வேண்டியது.

மு ராம—இந்த ஏலத்தைக் கான்சல் செய்து அதிகத் தொகைக்கு கேட்டிருக்கும் நபருக்கு ஏலம் போடவேண்டியது.

மெ செ ச—மறுஏலம் போடலாமா?

மு ராம—பேஷாகப் போடலாம். அப்படித் தீர்மானம் வரவேண்டும்?

“நூபாய் 61100-க்கு ஏலங்கேட்ட வத்தலகுண்டு திரு. கா அசன் ராவுத்தருக்கு ஏலம் போடப்படாமல் மறு நபருக்கு அதே தொகைக்கு விடப்பட்டிருப்பதினால் இப்பொழுது ஷை டோல்கேட்டை ரூ. 65000-க்கு திரு சே இ பீர்முகமது ராவுத்தரவர்களுக்கு முனிசிபல் லாபத்தை உத்தேசித்து இந்த ஏலத்தை கான்சல் செய்து ரூ 65000-க்கு ஷை பீர்முகம்மது ராவுத்தருக்கு விடலாம் எனத் தீர்மானிக்கிறது” என்ற தீர்மானத்தை திரு முராம பெரியண்ண் செட்டியாரவர்கள் பிரபோஸ் செய்தார்.

சபீ க மு—நான் இதை ஆமோதிக்கிறேன்.

தலைவர்—(பெரியஎழுத்தில் காணும்வாக்கியங்கள்)இவைசன்ரிக்கார்டுக்குவிரோதமானவை. அப்படி எழுதிக்கொள்ள முடியாது.

மு ராம—நான் பிரபோஸ் செய்கிறேன். எழுதிக்கொள்ளமுடியாதெனன்றால் நாங்கள் என்ன செய்வது. எல்லாம் உங்களிஷ்டம் தானே.

சபீ க மு—அன்றையக் கூட்டத்திற்கு வந்திருந்த சுபேர்களும் இப்பொழுதும் வந்திருக்கிறார்கள். தயவுசெய்து அவர்களை கேளுங்கள். நானும் இருந்தேன். திரு. கா அசன் ராவுத்தர் அவர்களுக்குத்தான் ஏலம் விடப்பட்டது.

அ மு க—நாங்கள் பிரபோஸ் செய்கிறோம். அதே மாதிரி எழுதி தாங்கள் அனுமதிக்கவில்லை என்று எழுதிக்கொள்ளுங்கள்.

சி மு அரு—(தலைவரை நோக்கி) ஏலத்தை கான்சல் செய்வதற்குக் காரணம் வேண்டாமா? அதற்குத்தான் குறிப்பிட்டிருக்கிறது.

மரு சு—பூரா தீர்மானத்தையும் ஆக்ஷேபிக்கவில்லை. குறிப்பிட்ட வரிகளை மட்டும்தான்.

மு ராம—ஏலம் விட்ட அன்று நீங்களும் இருந்தீர்களாமே? ஏலம் கேட்டதும் முடிவு செய்ததும் யாருக்கு.

சபீ க மு—அன்று வந்திருந்த சுபேர்களையும் தயவு செய்து ஒவ்வொருவரிடத்திலும் கேளுங்கள். இடையில் கூட்டத்தில் குழப்பமும் ஏற்பட்டது. தலைவருக்கும் செக்ரட்டரியும் சுமார் அரைமணிநேரம் ஆலோசித்தார்கள். விசிட்டர் காலரியில் இது பற்றி பரபரப்பு ஏற்பட்டது. அதில் ஒரு குரல்—“மிகவும் ஒழுங்காய் நடத்திய மதுரைமுனிசிபல்சேர்மன் திரு ஆர். எஸ் நாயுடு அவர்களிடத்திலும் கூட கம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேறிவிட்டது.” இப்படி பல பேச்சுக்கள் எழுந்தன. தலைவரும் ஏலம் சம்பந்தப்பட்ட பேப்பர்களை பலதரம் செக்ரட்டரியிடம் திருப்பித் திருப்பி கேட்டுக்கொண்டே இருந்தார்.

தலைவர்—(மு ராம வைப் பார்த்து) தீர்மானம் உண்மைக்கு விரோதமாக இருப்பதால் வாபீஸ் வாங்கிக்கொண்டால் நான் எழுதிக்கொள்ளுகிறேன்.

மு ராம—எதை வாபீஸ் வாங்கிக் கொள்வது.

தலைவர்—குறிப்பிட்ட வாசகத்தைப் படித்துக் காண்பித்தார்.

மு ராம—அதில் என்ன ஆக்ஷேபணையிருக்கிறது. நடந்தபடியேதான் எழுதியிருக்கிறது.

## காரைக்குடி முனிஸிபாலிட்டி.

தலைவர்—ஆக்ஷேபணையிருப்பதாக எனக்குத் தெரிகிறது.

சபீ க மு—அன்றையக் கூட்டத்தில் திரு கா அசன் ராவுத்தர்தான் ஏலங்கேட்டது. அவருக்குத்தான் முடிவு செய்யப்பெற்றது. அவ்விதமிருக்க தீர்மானப் புத்தகத்தில் ஷை அசன் ராவுத்தர் பெயர் இல்லாமல் வேறொரு நபரின் பெயர் இருக்கக் காரணமென்ன.

தலைவர்—அது நியாயஸ்தலத்தில் வரட்டும்.

மு ராம—நான் ஷை தீர்மானம் கொண்டுவந்திருக்கிறேன். நான் பிரபோஸ் செய்வதை எழுதிக் கொள்ளுங்கள். பிறகு உங்களிஷ்டம்போல் செய்யுங்கள்.

தலைவர்—அதை வாபீஸ் வாங்கிக் கொண்டால்தான் மேல் நடத்தலாம்.

சி மு அரு—அவர்கள் உண்மை என்றுதான் எழுதியிருக்கிறார்கள்.

மு ராம—கவுன்ஸில் தனதா அல்லது பொதுஜனங்களுடையதா? இதை நாங்கள் வாபீஸ் வாங்கவில்லை.

(இதற்கிடையில் திரு மரு சு அவர்கள் தீர்மானப் புத்தகத்தையும் சம்பந்தப்பட்ட பேப்பர்களையும் பார்த்து செக்ரட்டரியிடம் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தார்.)

மு ராம—கவுன்ஸில் லாபத்தை உத்தேசிப்பது முதல் கடமை. நமது கவுன்ஸில் மாட்சிமைதங்கிய ஐந்தாம் ஜார்ஜ் சக்ரவர்த்தி அவர்களால் ஏற்படுத்தப்பட்டது இவ்விரண்டையும் சேர்மென் அவர்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்

தலைவர்—ஏலம் அசன் ராவுத்தருக்கு விடப்பட்டது உண்மை. ஆனால் அவர் ஏஜண்டாக இருந்து வேறொரு நபருக்காகக் கேட்டார்.

வெங்கிட்டராமய்யர்—ஒரு தீர்மானம் வருவதாயிருந்தால் அதில் விவாதங்களும், யூகை(?)களுமிருக்கக்கூடாது என்று ஆங்கிலத்தில் ஒரு சட்டத்தைப் படித்தார்.

சி மு அரு—தமிழில் படியுங்கள்.

மு ராம—நமக்குத் தலைவரவர்கள்வாசிப்பார்கள். தலைவர் எந்தப் பாஷையில் படித்தாலும் நமக்குத் தெரியும்.

சி மு அரு—‘யூகை’ என்பது தமிழ் வார்த்தையா? அதன் அர்த்தமென்ன.

(நகைப்பு)

தலைவர்—வகிக்கிறது என்று அர்த்தம். கருப்பு சிகப்பு என்று வகிக்கிறது.

மு ராம—பால் வெள்ளையாயிருக்கும். வெள்ளை எப்படி யிருக்கும் என்றால் கொக்குப்போலிருக்கும் என்று வகிப்பது.

(நகைப்பு)

சபீ க மு—(தலைவரை நோக்கி) உங்களுக்கு அட்சேபணை யிருந்தால் அதையும் எழுதிக்கொள்ளுங்கள்.

மு ராம—சேர்மனுக்கு எல்லாம் முடியாது. எதைத்தான் எழுதுவார்.

தலைவர்—ரூ ௬௧௧00 முதல் விடப்பட்டிருப்பதினால் என்பதுவரை ஆட்சேபகாமானது. இதை நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

மு ராம—பிரபோஸ் எப்படி செய்யப்பட்டதோ அப்படியே எழுதியிருக்கிறீர்களா.

தலைவர்—ஆம்.

பிறகு திரு. சபீ க மு கேட்ட கேள்விகளும் தலைவர் அளித்த பதிலும் வருமாறு:—

சபீ க மு—ஏலங்கேட்ட நபர் பவர் ஏஜண்டா.

தலைவர்—ஆம்.

சபீ க மு—பவர் ரிஜிஸ்ட்டர் செய்யப்பட்டிருக்கிறதா.

தலைவர்—இல்லை. ஸ்பெஷல் பவர்.

சபீ க மு—அந்த பவருக்கு நகல் வைத்திருக்கிறீர்களா?

தலைவர்—இல்லை. வாபீஸ் கொடுத்தாய் விட்டது.

சபீ க மு—நீங்கள் வைத்துக்கொள்ள வேண்டாமா?

தலைவர்—அதை நீங்களேன் கேட்கிறீர்கள்.

சபீ க மு—பவரில் எவ்வளவு ஸ்டாம்பு ஒட்டியிருக்கிறது.

தலைவர்—எவ்வளவு ஒட்ட வேண்டுமோ அவ்வளவு ஒட்டியிருக்கிறது, இனி நீங்கள் கோட்டைவிட்டு கேட்டுக் கொள்ளுங்கள்.

மு ராம—முன் ஒரு காப்பிக்கு நகல் கேட்டு விட்டோம். ஒரு மாதமாகிறது. பதில் கிடையாது.

தலைவர்—வருகிறபோது வரும்.

சபீ க மு—பவர் கொடுத்தவரும் பவர் கொடுக்கப்பட்டவரும் டிபாஸிட் கட்டியிருக்கிறார்களா.

தலைவர்—கோட்டைவிட்டுக்கேளுங்கள்.

சபீ க மு—இரண்டு பேர் கேட்டால் ஏலம் செல்லுமா.

தலைவர்—அதெல்லாம் ரிக்கார்டில் பார்த்துக் கொள்ளுங்கள்.

சபீ க மு—இதெல்லாம் ரிக்கார்ட்டில் எப்படித் தெரியும்.

தலைவர்—‘நீங்கள் மேலே போங்கள்’ என்று சொல்லி மீண்டும் சொன்னதாவது—வக்கீலைக் கேட்டோம். ஏலத்தை கான்சல் செய்யக்கூடாது என்று சொல்லியிருக்கிறார். என் அபிப்பிராயமும் அப்படித்தான்.

சபீ க மு—அது சரிதான். ஒருவரே ஏலம் கேட்டு ஒருவருக்கு முடிவு செய்திருந்தால் சரிதான். இது அப்படியில்லையே.

தலைவர்—அதெல்லாம் என் சொல்லுகிறீர்கள். என்னிஷ்டம்.

அ மு க—நான் இதற்கு திருத்த பிரேரேபணையாகக்கொண்டுவருகிறேன். ௬௫000-க்கு மறு ஏலம் என்றிருப்பதை ௬௫000-க்கு மேல் எவ்வளவுக்குக் கேட்கப்பட்டாலும் என்று திருத்திக்கொள்ளுங்கள்.

சபீ க மு—நான் ஆமோதிக்கிறேன்.

மு ராம—தயவுசெய்து அப்படியே திருத்திக்கொள்ளுங்கள்.

தலைவர்—இதை நான் ஏற்றுக்கொள்ள முடியாது. பழைய தீர்மானத்தையே ஓட்டுக்கு விடுகிறேன்.

மு ராம—திருத்தப் பிரேரேபணையை ஏற்றுக்கொள்ள முடியாது என்பதை எழுதிக்கொள்ளுங்கள்.

தலைவர்—இடமிருந்தால் எழுதிக் கொள்ளுகிறேன்.

மரு சு—முடியும் முடியாது என்று எழுதிக்கொள்ளுங்கள்.

தலைவர்—நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

மு ராம—திருத்தப் பிரேரேபணையை எடுத்துக்கொள்ளவில்லை என்று எழுதிக்கொள்ள மாட்டீர்களா? அதிக தொகைக்கு கேட்டால் முனிஸிபாலிடிக்கு லாபந்தானே, முடியாது என்றால் உங்களிஷ்டம்.

தலைவர் பழைய தீர்மானத்துக்கு சாதகமாக உள்ளவர்கள் கைதூக்குங்கள்.

மு ராம—திருத்தப் பிரேரேபணைக்கு நான் ஓட்டுக்கொடுக்கிறேன்.

தலைவர்—நான்தான் ஒப்புக்கொள்ளவில்லை.

(சிறிது குழப்பம்)

மு ராம—சரி; நான் கொண்டு வந்த தீர்மானத்துக்கே ஓட்டுச் செய்கிறேன்.

சபீ க மு—நானும் அப்படியே.

தலைவர்—கைதூக்குங்களேன்.

சபீ க மு—நீங்கள் எழுதிக் கொள்ளுங்களேன்.

### பிறகு சாதகமாக ஓட்டுக்கொடுத்தவர்கள்.

திருவாளர்களான மு ராம பெரியணன் செட்டியார், அ மு க முத்துக்கருப்பன்செட்டியார், சி மு அரு முத்துராமன் செட்டியார், முத்து அரு செ சிதம்பரம் செட்டியார், கா வ பழனியப்ப செட்டியார் மரு சு சுப்பையாச் செட்டியார் சபீ க மு முகமது இபுராகிம் ராவுத்தர், ஸ்ரீமதி மரகதவல்லி அம்மாள், திரு கே குருசாமி.

### பாதகமாக ஓட்டு செய்தவர்கள்.

என் எஸ் வெங்கட்டராமய்யர், செ நா நாராயணன் செட்டியார், சேர்மன்.

### நியூட்ரலாக இருந்தவர்கள்.

மெ செ ச சிதம்பரம் செட்டியார், ஈ கு ராமநாதன் செட்டியார்.

பிறகு சாதகமாக ஓட்டுச் செய்த கவுன்ஸிலர்களின் சார்பாக திரு அ மு க முத்துக்கருப்பன் செட்டியாரவர்கள் கீழ்க்கண்ட தீர்மானத்தை வாசித்தார்.

“இவ்வூர் குமரன், ஜஸ்டிஸ், திராவிடன் பத்திரிகை நிருபர்களை ஸியாயத்துக்கும், வழக்கத்துக்கும் விரோதமாக தலைவர் தமது யதேச்சாதிகாரத்தினால், காரணமில்லாமல் ரிப்போர்ட்டர் காலரியிலிருந்து வெளியேற்றியதனால், சேர்மெனுடைய நடத்தையைப் பலமாகக்கண்டித்து அதற்கறிகுறியாக வெளியேறுகிறோம்” என்று கூறிவிட்டு ௯ கவுன்ஸிலர்கள் வெளியேறினர். மற்றவர்களும் அவரவர்பாடு எழுந்து சென்றனர்.


CONTAINS NO ANIMAL FAT
IS PURELY HERBAL
Zam-Buk
"RUB IT IN"
FOR CUTS · BRUISES · BURNS · SCALDS · PILES · ECZEMA · ITCH · DELHI SORES · BAD LEGS · PRICKLY HEAT · ULCERS · RINGWORM · BOILS · ABSCESSES · CHRONIC SORES · BITES & STINGS · SPRAINS · RHEUMATISM
झाम्बक
चर्मरोगांचे उत्तम औषध

மிருகக் கொழுப் பில்லாதது.

உலகத்தில்

## குணம் தருவதில் பெயர்பெற்ற தைலம்.

உலகத்தில் மிகவும் வெற்றியுடன் விளங்கும் குணத்தைத்தரும் எண்ணை மருந்தாகிய ஜாம்பெக் கிடைத்தற்கரிய மூலிகை சத்துக்களால் மிகவும் பரிசுத்தமாகவும் ரசாயன முறைப்படியும் செய்யப்பெற்றது. வெட்டுகள், சிராய்ப்புகள், எரிபுண்கள், பூச்சிக்கடி, சில்லரை வலிகள் முதலியவைகளையும் நாட்பட்ட இன்னும் மற்ற புண்களையும் வண்ணான் சிறங்கு, குத்துகாயம், விஷங்கலந்த புண் முதலியவைகளையும் சிகிச்சை செய்வதில் தன்னுடைய அற்புத மகாசக்தியை நிதர்சனமாக ஜாம்பெக் காண்பிக்கிறது. வலியை நிறுத்தி, சொங்கு எரிச்சல் முதலியவைகளையும் சமனம் செய்கிறது. அது நோய்க் கிருமிகளை நாசம் செய்து ஓட்டுகின்றது. புதிய ஆரோக்யமான சர்மத்தை வளரச்செய்கிறது. எல்லா மருந்து வியாபாரிகளும் ஒரு பெட்டி ரூ. 1—0—0 அல்லது (2—4—0-க்கு) விற்கிறார்கள்.

ஜாம்பெக்
Zam-Buk : Zam-Buk

## பிராமணீயக்கொடுமை

பணம் பறித்தல்.

மிஸ் மேயோவிடம், சென்னையிலுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினரொருவர் பிராமணீயக் கொடுமையைபற்றி அடியில் வருமாறு கூறியிருக்கிறார்:—

"சர்க்காருக்குக்கொடுக்கும் வரியைக் காட்டிலும்பிராமணனுக்கு அதிகமான வரிகளைக் கொடுக்கிறோம். பிறந்த தினத்திலிருந்து இறக்கும் வரை ஒரு ஹிந்து பிராமணனுக்கு வரிகொடுத்துக்கொண்டேயிருக்கிறான். குழந்தை பிறந்தவுடன்பிராமணனுக்குத்தக்ஷிணை கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தை சுகமாக வளராதாம். குழந்தை பிறந்த ௧௬-வது நாள் 'தீட்டுக் கழியும்' சடங்கென்று ஒரு விழா நடத்த வேண்டும். அதற்கும் பிராமணனுக்குத் தக்ஷிணை கொடுக்க வேண்டும். சிறிது காட்கழித்துக் குழந்தைக்குப் பேரிட வேண்டும்; அதற்கும் அவனுக்குத் தட்சணை உண்டு; ஒரு வருடம் கழித்து ஆண்டு நிறைவுவிழா வந்து விடும். அப்பொழுதும் பிராமணனுக்குக் கொண்டாட்டந்தான்.

பின்பு குழந்தைக்குச் சாதம் ஊட்ட வேண்டும் அதற்கும் பிராமணனுக்குத் தக்ஷிணை உண்டு. குழந்தை ஆண் குழந்தையாயிருந்தால் குழந்தைக்குக் குடுமி வைக்க வேண்டும். அதற்கும் பிராமணனுக்குத் தக்ஷிணை உண்டு ஏழாவது வயதில் குழந்தைக்கு அக்ஷராப்பியாசம் செய்விக்க வேண்டும். அப்பொழுதும் பிராமணனுக்குக் கொண்டாட்டந்தான். கொஞ்சம்செல்வவந்தர்கள் வீடாயிருந்தால் தங்கத்தினுல் பேனு செய்து அதை பிராமணனுக்குத் தத்தம் பண்ண வேண்டும்.

பெண்குழந்தையாயிருந்தால் ௧௨-வயதுக்குள் கல்யாணம் செய்விக்க வேண்டும். இச்சமயத்தில் பிராமணனுக்குக் கொழுத்த பணம் கிடைக்கும் கிரகதினம் வந்தால் அப்பொழுதும் பிராமணனுக்கு ஏராளமான தக்ஷிணை கிடைக்கும். இன்னும் ருது சாந்தி முதலிய வைபவங்களிருக்கின்றன. இவ்விதமாகப் பல தடவைகளில் பிராமணனுக்கு உயிருள்ள மட்டும் தக்ஷிணை கொடுக்க வேண்டும். இது இத்துடன் நின்றபாடில்லை. இறந்த பின்பும் பிராமணப் பேய் நம்மைவிட்டு விடாது. பிராமணனுக்குப் பணம் கொடுக்காமல் பிரேதத்தை அடக்கம் செய்யக்கூடாது. பிரேதத்தை அடக்கம் செய்யும் பொழுது பிராமணனுக்குக் கொழுத்த தக்ஷிணை கொடுக்க வேண்டும். ஒருவன் இறந்து ஒரு வருடம் வரை மாதா மாதம் அவனுடைய மகன் சிராத்தம் கொடுக்க வேண்டும். ஏனெனில் பிராமணன் உண்பதும், உடுப்பதும், குடிப்பதும் பிதிர்க்களுக்கு திருப்திசெய்யக்கூடியதாம். பின்பு ஒவ்வொருவருடமும்,இறந்தவனுடைய மகன் பிராமணனுக்கு நிறைய விருந்தளிக்கவேண்டும். ஹிந்து மதாசாரப்படி இந்த வருமானமெல்லாம் பெற பிராமணனுக்கு உரிமையிருக்கிறதெனக் கூறுகிறான். பிராமணனுக்குக் கொடுக்க வேண்டியவைகளைக் கொடுக்காதவன் நரகத்தில் போய் விழுந்து விடுவான் எனப் பிராமணன் சொல்லுகிறான். இந்தச் சடங்கின் பொழுதெல்லாம், பிராமணனுடைய பாதங்களைத் தண்ணீரால் கழுவி அந்த அழுக்குத் தண்ணீரை ஜனங்கள் குடிக்க வேண்டுமாம். ஏழைகளைப் பல மூட வழக்கங்களில் நம்பச் செய்து, அவர்களை ஏமாற்றிப் பணம் பறித்து சோம்பேறியாக பிராமணன் வாழ்ந்து வருகிறான். சர்க்கார் உத்தியோகமோ, அல்லது வக்கீல் உத்தியோகமோ தவிர வேறு எந்த உத்தியோகமும் பிராமணன் பார்ப்பதில்லை. சென்னை மாகாணத்தில் கரு லக்ஷம் பிராமணர்களிருக்கிறார்கள். இவர்களுக்கு அடிமையாக, உழைத்துப் போடுவதற்குச் சுமார் நான்கு கோடியே பத்து லக்ஷம் பிராமணரல்லாதாரிருக்கின்றனர். ஆகையால் நாங்கள் விடுதலை பெற்று, சுதந்திரமடைந்து, பிறர் உதவியின்றி வாழும் ஆற்றல் அடையும்வரை, நாட்டில் சமாதானத்தையும், பாதுகாப்பையுமளிக்க நம்தேசத்தை அன்னிய தேசத்தவர் ஆளுவதே பொருத்தமானது. எங்களை ஏமாற்றி, எங்களுடைய பணத்தைப் பிய்த்துப் பிடுங்கித் தின்று கொண்டே எங்களைத் தீண்டாதவர்களென்றும், நாங்கள் தொட்டால் அசுத்தமாகி விடுமென்றும் கூறும் கரு லக்ஷம் பிராமணர்களுக்கு அடிமையாக நாங்கள் வாழ்வதைவிட எங்களைப் பாதுகாத்துவரும் அன்னியர் ஆளுகையே எவ்வளவோ மேலானது."

'இந்திய மாதா'

---

## காரைக்குடி முனிஸிபாலிட்டியில் இந்து மத ஆசாரம்.

காரைக்குடி திரு. ராவ்பகதூர் மரு. சு. சுப்பையா செட்டியாரவர்கள் கொண்டுவந்த அவசரத்தீர்மானங்களுக்காக முனிஸிபாலிட்டியாரால் சென்ற செவ்வாய்க்கிழமை மாலை ௪-௩0 மணிக்கு அவசரக் கூட்டம் கூட்டப் பெற்றது. அது போது ஒருவர் தவிர, ஏனைய அங்கத்தினர்களும் தலைவரும் காணப்பட்டார்கள். பொதுமக்களுள் பல பிரமுகர்களும் வியாபாரிகளும், பொதுநல ஊழியர்களும், உத்யோகஸ்தர்களும், மாணவர்களும் நிறைவுற்றிருந்தனர். போலீஸ் சேவகர்கள் போலீஸ் உடையணிந்து உள்ளும் புறமும் நடமாடிக் கொண்டிருந்தார்கள். ஜஸ்டிஸ், அசோஸியேட்டட்பிரஸ், குமரன், திராவிடன், ஊழியன் முதலிய பத்திரிகைகளின் நிருபர்கள் நடைமுறை நிகழ்ச்சியை இருப்பிடத்திருந்து எழுதிக் கொண்டிருந்தார்கள். தலைவர் தலைக்கு மேல், அவர் தம் உருவப்படம் மட்டும் தனியாகத் தொங்கிற்று. அது போது ராவ்பகதூர் மரு. சு. சுப்பையா செட்டியாரவர்கள் கொண்டுவந்த தீர்மானங்களிலொன்று வருமாறு:—

> நமது முனிஸிபல் மாதாந்த மீட்டிங்கு கடைசி வாரம்செவ்வாய்க்கிழமையில் நடைபெற வேண்டுமென்று 1-2-30 தேதி நமது கவுன்ஸிலில்தீர்மானம் செய்து அதன்படி நடை பெற்றுவருவது பலவித அசௌகரியங்களுக்கு இடம்தருவதால் அந்தத்தீர்மானத்தை இந்த கவுன்ஸில் ரத்துசெய்கிறது.

இதுபற்றி மாற்றப்பட வேண்டிய அவசியமில்லையென்று, பல கவுன்ஸிலர்கள் எழுந்துப்பேசி "செவ்வாய்க்கிழமை மாலைக்கூட்டம் நிகழ்த்துவது எவ்வகையில் அசௌகரியம்? இதுவரை நடந்து கொண்டுவந்த எந்தக் கூட்டம் எவருக்கு அசௌகரியத்தை உண்டாக்கிற்று?" என்று கேட்டார்கள். அதற்கு ராவ்பகதூர் மரு. சு. சுப்பையா செட்டியாரவர்கள் கூறிய பதிலின் சாரம் வருமாறு:—

> "இந்துமத ஆசாரத்துக்கு செவ்வாய்க்கிழமை அவ்வளவு பொருத்தமில்லாததால்; அதனுல் கவுன்ஸிலர்களுக்கும் அசௌகரியம் ஏற்படலாம். (ஏற்படுகிறது)"

இது சரியான சமாதானமில்லையென்று மறுத்துக் கூறப்பட்டும் தலைவர் தம் யதேச்சாதிகாரத்தால் வழக்கம்போல் முன் ஏற்பாடுகள் செய்துவந்தபடி ஓட்டுக்கு விடுவதாகக்கூறி ஓட்டுக்கும் விட்டு தமது ஓட்டையும் தீர்மானத்துக்குச் சாதகமாகக் கொடுத்துத் தீர்மானத்தையும் நிறைவேற்றிக்கொண்டார் என்ற இச் செய்கையைப் பற்றிச் சில தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

சென்ற ௪-௨-௩0 சனிக்கிழமைக் கூட்டத்தில் ஒவ்வொரு மாதக் கடைசி செவ்வாய்க்கிழமை மாலை ௪ மணிக்கு நடத்துவதென்று ஏகமனதாகத் தீர்மானித்த தீர்மானம் ௧௯-௪-௩0-ம் தேதி ரத்து செய்ய வேண்டிய அவசியமும், அன்று கூட்டம் நடத்திய தலைவரே இன்று அத்தீர்மானம் அவசியமில்லையென்று கருதுகின்றகின்ற ரகசியமும் பொதுமக்களுக்குத் தலைவர் அறிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறார். திரு. ராவ்பகதூர் மரு சு சுப்பையா செட்டியாரவர்களுக்கு இந்துமதத்தைப்பற்றி எவ்வளவு தெரியுமென்று தெரிந்துகொள்ள விரும்புவதோடு கீழ்கண்ட கேள்விகளுக்கும் பதில் அளித்தால் உபகாரமாயிருக்குமென்றும் தெரிவிக்கின்றேன்:—

இந்துமதமென்றால்என்ன? எப்பொழுது தோன்றிற்று? தலைவர்யாவர்? வேதம்எது? இந்துமத ஆசாரங்கள் எவை? புராணம்எது? புண்ணியதினம்எது? பாவதினம்எவை? அதற்கென்னசெய்யவேண்டும், செய்கின்றீர்கள்? முனிஸிபல் கூட்டத்திற்கும் இந்துக்கள் புண்யபாவதினத்திற்கும் என்னதொடர்பு? இந்துக்கள்மட்டும் தான் கவுன்ஸில்களில் இடம்பெற்றிருக்கிறார்களா?

தாங்கள் வகிக்கும் கவுன்ஸில் ஸ்தானமும், பெற்ற ராவ்பகதூர் பட்டமும் இந்து மத சாஸ்திரப்படி கிட்டியதா? கவுன்ஸில் நடைமுறைச்சட்டமும், தலைவரின் யதேச்சையும் இந்துமத தருமசாஸ்திரத்தை ஆதாரமாகக்கொண்டதா? பிரிட்டிஷ் அரசாங்கச் சட்டத்தை ஆதாரமாகக்கொண்டதா?

தங்கள் மத பக்திக்காக ஒருவகையில் பாராட்டுகிறேன். மதத்தைக் காக்கவந்ததாகச் சொல்லிக்கொண்டிருந்த ஆதிசங்கரரும் மடிந்துபோக, அரசாங்கப் பொது ஸ்தாபனங்களுக்கு நிற்கும் நம்மவர்கள் 'இந்துக்கள் தொகுதி' என்ற பெயரால் நிற்க வெட்கப்பட்டு 'மகமதியரல்லாதார் தொகுதியில் போட்டியிடுகின்றேன்' என்று கூறும் இக்காலத்தில் தாங்கள் மதத்தையும் பண்ணிய காலத்தையும் நிலைக்கவைக்க முற்படுவது சிலரால் போற்றவும்படலாம். அதோடு அரசாங்க விடுமுறை நாளாக விளங்கும் ஞாயிற்றுக்கிழமையைக் கூட மாற்றி செவ்வாயில் விடுமுறை விடுமாறு செய்விப்பதோடுசாஸ்திரத்தை இன்னும் நன்றாய்ப் பார்த்து அதில்கூறப்படும் அஷ்டமி, நவமி, கரிநாள், யமகண்டம், ராகுகாலம், மரணயோகம் போன்ற நாட்களிலும் மற்றும் விடுமுறைவிட்டு காரைக்குடியில் முனிஸிபல் ஆபீஸையும் எறக்குறைய பூட்டிவிட்டு தலைவரும், முனிஸிபல் நிர்வாக உத்யோகஸ்தர்களும், இதர மத பக்தர்களுங் கூடித் தவஞ்செய்தால் நல்லமோட்சம் கிட்டுமென்றும், வரிகொடுப்போரும் வாயார வாழ்த்துவார்களென்றும்,இவ்வாலோசனையைஇந்துமதக்காரர்கள், வருணாசிரமிகள், புராணிகர்கள், புரோகிதர்கள், சனாதன தர்மிகள், சாஸ்திரிகள், வைதீகர்கள், வரிகொடுப்போர்கள், பொதுமக்கள் ஆகியவர்கள் சார்பாக விண்ணப்பித்துக் கொள்ளுகின்றேன். இதுபற்றி இன்னும் எழுதவேண்டிய அவசியமிருக்கிறதென்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

'தில்லை நாயகம்'

---

### பத்திரிகை விற்க இயந்திரம்.

நவீன உலகில் கண்டுபிடிக்கப் பெறுகின்ற விசித்திர இயந்திரங்களுள் பத்திரிகை விற்கும் இயந்திரமும் ஒன்றாகும். ஜர்மனி இயந்திர நிபுணர்கள் இதனை சோதனை செய்து வருகின்றார்கள். இதில் காணப்படுகின்ற ஒரு துவாரம் வழியாக பத்திரிகையின் கிரயத்தை போட்டுவிட்டால் அன்று காலையில் அல்லது மாலையில் வெளியான பத்திரிகை தானே வெளிவருமாம்.

### ரயில்வண்டி மோதுண்டது.

ஓர் குட்ஸ் ரயில்வண்டி நிப்ரு-காடியா ரயில்வேயிலுள்ள போவாய் ரயில்வேஸ்டேஷனுக்கு அருகில் வழியில் போய்க்கொண்டிருந்த எருமைக் கூட்டத்தை மோதி தண்டவாளத்தை விட்டு கீழே இறங்கியது. அதன் காரணமாக இஞ்சினிலிருந்த ஒருவர் மரணமடைந்தார். ரயில் ஓட்டிக்கும் கொஞ்சம் காயமேற்பட்டது.

---

## நோட்டீஸ்.

இராமநாதபுரம் ஜில்லா எழுவங்கோட்டை தாலூகா ஆ. கருங்குளத்திலிருக்கும் சுப்பிரமணியனம்பலம் மகன் முத்தப்பா அம்பலமாகிய சுப. மு. முத்துக்கருப்பனம்பலம் மகன் மைனர் ஒரு வயதுள்ள மீனாக்ஷிசுந்தரம் ஷை யானுக்கு தாய் மாமன் ஆ. கருங்குளம் சி. பள. கருப்பய்யா அம்பலம் கிபார்டியன் மூலம்.

ஷை முத்துக்கருப்பனம்பலம் சென்ற சுக்கில-ஞு மாசி-மீ 9-உயில் காலஞ்சென்றுவிட்டார் அவர் தன்னுடைய மூத்ததாரத்தின் மக்களான இதனடியில் கண்டவர்கள் சரியானபடி நடந்துகொள்ளாததை முன்னிட்டு சுமார் பத்து ஞு-த்துக்கு முன் ஒவ்ஸ்தவேசு மூலம் பாகவிவஸ்தை செய்துகொடுத்து அதுமுதல் அவர்கள் பிரத்தியேகமாயிருந்து வருகிறார்கள்.

ஷை பாகத்துக்கு இப்பால் அவருடைய நிலபலங்கள் வருமானங்களையும் கொடுக்கல் வாங்கல்களையும் வைத்துக்கொண்டு ஷை முத்தய்யா அம்பலமாகிய முத்துக்கருப்பனம்பலம் அவர் இளைய சம்சாரம் காளியம்மையிடமிருந்து வந்தார். அவருக்கு பிறந்த சுமார் ஒரு வயதுள்ள ஷை மைனர் மீனாக்ஷிசுந்தரம் யென்று பெயருள்ள மைனர் ஆண் குழந்தை யிருக்கிறான். இப்படிக்கிருக்க ஷை மூத்ததாரத்தின் மக்கள்களில் வெங்கிடாஜலம் 1. சோமசுந்தரம் 2. இவர்கள் சில தினங்களுக்கு முன் ஷை மீனாக்ஷிசுந்தரம் வீட்டுக்கு வந்திருந்தவர்கள் வீட்டிலுள்ளவர்களுக்கு தகவல் தெரியாமல் கொடுக்கல் வாங்கல் ஆதாவுகள் கணக்குகள் இவைகள் வைத்திருந்த பெட்டியை கொண்டு போய்விட்டார்கள். ஷை முத்தப்பா அம்பலமென்ற சு. ப. மு. முத்துக்கருப்பன் அம்பலம் பேருலுள்ள யாவற்று பாத்தியங்களையும் நியாயப்படிக்கும் சட்டப்படிக்கும் ஷை மைனர் மீனாக்ஷிசுந்தரம் அடைந்திருப்பதால் ஷை சு. ப. மு. முத்துக்கருப்பனம்பலம் பேரால் கொடுக்கப்பட்டிருக்கும் யாவற்று கொடுக்கல் வாங்கலுள்ள கடன் தொகைகள் இவைகளை ஷை மைனருக்காக என்னிடம் கொடுக்கவேண்டுமே யல்லாமல் இதனடியில் கண்ட யாரிடமும் கொடுக்ககூடாதென்பதையும்மீறி கொடுக்கும் பக்ஷத்தில் அவைகள் ஷை மைனரைக் கட்டுப்படுத்தாது என்பதையும் இதின் மூலம் தெரிவிக்கலாயிற்று.

இனங்களின் விபரம்.

(1) ஷை முத்தப்பா அம்பலமென்ற சுப. மு. முத்துக்கருப்பனம்பலம் மூத்ததாரம் சிசுப்பு.

(2) ஷை மகன் லேட் முத்துராமன் மகன் 15 வயதுள்ள மைனர் சுப்பய்யா.

(3) ஷை லேட் முத்துராமன் தம்பி 38 வயதுள்ள வெங்கிடாஜலம்.

(4) ஷை தம்பி 35 வயதுள்ள செகன்னாட.

(5) ஷை தம்பி 32 வயதுள்ள சோமசுந்தரம்.

சி. பழ. கருப்பய்யா அம்பலம்,
ஆ. கருங்குளம்,

18—4—1390.

---



பெண்கள் அடிமையிலும் அடிமைகளாயிருக்கிறார்கள். தற்பொழுது அவர்கள் பெற்றிருக்கும் மணவினை வேலையிலுள்ள உரிமையும் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக அவர்கள் உழைத்த உழைப்பின் பலனாகும். சரியான மணமானது கடவுள் தன்மை பொருந்தியது என்றே கூறவேண்டும். தீயில்லாமல் மனிதர் எவ்வாறு நாகரிகமுடையராய் வாழமுடியாதோ அதே போன்று வீட்டிலுள்ளாரெல்லாம் ஒத்து நடந்தாலொழிய ஒருவீடு நன்றாய் வாழாது. ஒவ்வொரு நல்லரசும் சீரும் சிறப்பும் பொருந்திய குடும்பத்தார்களாலேயே ஆக்கப்பட்டிருக்கின்றது. குடும்பத்தைக் கெடுக்க முயல்வது முட்டாள்தனமாகும். நான் மணத்தில் நம்பிக்கையுள்ளவன். ஆண்களும் பெண்களும் தங்கள் வாழ்க்கை நலத்தைத் தேடிக்கொள்வதற்கு உரிமையிருக்கக்கூடாதென்னும், கிழவர்களையும் கிழவிகளையும் நான் வெறுக்கிறேன்.

நல்லவனுடைய முக்கிய எண்ணமானது தன்னுடைய ஒவ்வொரு செய்கையும் நற்குண நற்செய்கையுள்ள ஒரு மாதின் மனதைக் கவரவேண்டுமெனவும் ஒரு பெண்ணின் செய்கையும், பண்பும், நற்குண நற்செய்கையுமுள்ள ஒரு ஆடவனைக் கவரல் வேண்டுமெனவும் இருத்தல் வேண்டுமென்பதே என்னுடைய கருத்தாகும். உண்மையான அன்பு கலந்த மணமில்லாத உலகத்து வாழ்க்கையில் வேறொரு வெற்றியும் கிடையாது. காதல் மனைவியோடு வாழும் ஒருவனுக்கு எவ்வளவு இன்னல்கள் வந்தபோதிலும் அவையாவும் இன்பமாகவே தோன்றும்.

உலகிலுள்ள எல்லா சமயங்களும் பெண்களிலிருந்தே பல துன்பங்களும் ஏற்படுகின்றன எனப் பெண்பாலாரை இகழ்ந்துரைத்திருக்கின்றன. அப்படி இருக்குமேயானால் வீட்டில் என் காதற்கிழத்தியோடு வாழ்ந்து துன்பம் பெறுவதை துறவிகள் கூட்டத்திலிருந்து இன்பப்பேற்றை அடைவதைவிடப் பெரிதும் விழைகின்றேன். நமது பண்டைய நூலிலுள்ள ஒரு கதை வருமாறு. 'எல்லாம் வல்ல கடவுள் ஒரு உலகத்தையும் ஒரு மனிதனையும் படைக்கவேண்டுமென விரும்பினர். முதன்மையாக ஒரு உலகை யுண்டாக்கி அவ்வுலகில் ஓர் அழகிய தோட்டத்தில் ஒரு மனிதனையும் படைத்தார். சிறிது போழ்தில் அவன் தனிமையினுலுண்டாய சோர்வினுல் ரயில் வண்டியை எதிர்பார்த்து அங்கும் இங்கும் சுற்றுவான்போல சுற்றுவதைக் கண்டார். மகிழ்ச்சியாகப் பொழுதைக் கழிப்பதற்கு அவனுக்கு எதுவும் கிடைக்கவில்லை. மன ஒருமைப்பாட்டிற்கு ஒரு வழியும் இல்லாது போகவே கடவுள்மனிதனின் ஒரு விலா எலும்பை எடுத்து அவனுக்குத் துணையாக ஒரு பெண்ணை படைத்தார் இந்தக் கதை உண்மையென நான் கூறவில்லை. அவர்கள் இருவரும் அன்போடு இல்லறம் நடத்திவந்தார்கள். இறைவன் அவர்களை அத்தோட்டத்திலுள்ள பழத்தைப் புசிக்கலாகாதெனக் கட்டளை இட்டிருந்தான். ஆனால் அவா மேலிட்டினுல் அவர்கள் அதைப் பறித்து உண்ணவும், அன்று தொட்டு உலகில் இன்பதுன்பங்கள், நரை சாக்காடு முதலியவைகளும் பிறவும் தோன்றின வென்பர்.

உலகிலுள்ள ஏறக்குறைய எல்லா சமயங்களும் இன்பதுன்பம் நேருவதற்கு இன்ன காரணம் என ஒவ்வொரு கதையை இசைத்துக்கொண்டிருக்கின்றன. நாலாயிரம் ஆண்டுகட்கு முன்னரே எழுதப்பட்டதெனும் வேறொரு நூலிலும் இதேபோன்ற ஒரு கதையைக்காண்கின்றேன். எல்லா உரை ஆசிரியர்களும் பின் தோன்றியவை எல்லாம் முன்னுள்ளவை கட்கு பகர்ப்பு எனவே கூறுகின்றனர். அது எவ்வாறாயினும் ஆகுக. ஆதலினுல் ஆண்டுகளைப்பற்றி ஆராயத் தேவையில்லை. நான்முகன் ஒரு உலகமும், ஒரு ஆணும் ஒரு பெண்ணும் படைக்க வேணுமெனக் கருதினர். முதன்மையாக ஒரு உலகை உண்டாக்கி அதன் கண் ஒரு ஆணையும் பெண்ணையும் படைத்து அவர்களை இலங்கையில் வாழும்படி ஏவினர். அவர்கள் காதலனும் காதலியுமாக வாழவேண்டுமே யொழிய மணம் செய்துகொள்ளக் கூடாதெனக் கட்டளை பிறப்பித்திருந்தார். அவ்விடமானது நீர்வளம், நிலவளம், பொருந்தி கண்ணைக் கவருகிற பல நிற பறவைகளாலும், காதைக் கவருகிற பல இன்னிசை பாடும் பறவைகளாலும், நிறைந்திருந்தது. ஒருக்கால் இவ்வாறு நடந்திருக்குமேயானுல் இதே மேற்கூறியதைவிட சிறந்ததாகும். அவர்கள் இருவரும் ஒருவரோடொருவர் அன்பு பூணலாயினர். அவர்களுக்கு பெற்றோர்களோ குடும்பத்தார்களோ அன்பு கொண்டொழுகக் கூறவில்லை. இருபாலாரும் அன்பில் திளைத்தலைக் கண்டு நான்முகனர் இருவரையும் மணஞ்செய்யவைத்து அத்தீவை விட்டு வெளியேறக் கூடாதென உத்தாவிட்டிருந்தார். ஒவ்வொருவரையும் காலன் பிடரி பிடித்துந்துவது வழக்கமாதலால் ஆடவன் தன் ஆருயிர்க்காதலியைப் பார்த்து அவர்கள் வசிக்கும் இடத்தைச் சுற்றிப்பார்த்து வருவதாகக் கூறிச் சென்றான். வடகோடிக்கு வந்ததும் இந்தியாவானது தென்பட்டது. தூரத்துப் பச்சிலை கண்ணிற்குக் குளிமை என்பதற்கிணங்க இப்பொழுது கண்ட இடமானது முன்னர் வதந்தி வந்ததைவிட பன்மடங்கு சிறப்புள்ளதெனவும், இந்த இடத்தில் வந்து தங்கவேண்டுமெனவும் முடிவுகட்டிக் கொண்டு தன் மனைவியாகிய ஏவாளிடம் கூறினன். பழைய இடத்திலேயே இருத்தல் வேண்டுமென அவள் மறுத்துக்கூறினுள். விடாப்பிடியாக நிற்றலைக்கண்டு அவனோடு புறப்பட்டாள். அவர்கள் கடந்ததும் கடவுள் தன் கட்டளையை மீறியதற்காக சாபம் போட்டார். பெண்மணி மறுத்ததற்காக அவளுக்கு நற்பேற்றைக் கொடுப்பதாக கடவுள் மொழிய, அவள் கொடுத்தால் இருவருக்கும் கொடுக்கவேண்டுமெனவும் அன்றேல் அஃது அவனுக்குக் கிடைக்கப் பெறாதிருத்தல் நன்றெனவும் தெரிவித்தாள். ஆதாமியா அவன் குற்றம் செய்யவில்லையெனவும், குற்றத்திற்கெல்லாம் தானே பொறுப்பாளியெனவும் அவளுக்கும் சேர்த்து தண்டனை கொடுத்தல் சரியல்லவெனவும் மறுத்தான். ஆதலினுல் கடவுள் இருவரையும் மன்னித்தார். இவ்வாறல்லவா காதலனும் காதலியும் ஓர் உயிராய் உடல் இரண்டாய் நல்ல வீடு நடத்தல் வேண்டும். இக்கதை சிறிது எண்ணத்தக்கதும் முந்தியதைவிடச் சிறந்ததும் ஆகும். அதே சுவடியிலிருந்து பண்டை நாள் மக்கள் எவ்வாறு வாழ்ந்துவந்தார்களெனவும் இக்காலத்தில் எவ்வாறு வாழ்கின்றனர் எனவும் கூறமுடியும். நாம் கிறிஸ்தவரல்லாதவர்களை மாற்றுவதற்காக பிறநாடுகளுக்கு மிஷன்களை அனுப்புகின்றோம். ஆனுல் நம் வீட்டின் முன் கிடப்பது நமக்கு விளக்கவில்லை. தொலையிற் சென்று திருத்த முடியுமேயானுல் பக்கலில் ஏன் திருத்த முடியாது. இந்தச் சுவடியில் கூறுவதாவது 'ஆண்வலிமை பெண் அழகு, ஆண் வீரம், பெண் அன்பு, எப்பொழுது ஒருவன் ஒரு பெண்ணை நேசிக்கிறானே அதே பொழுதில் அந்தப் பெண் அவனை நேசிப்பாளேயானுல் அவ்விடமே தேவநலகமாகும். தேவர்களும் வானைவிட்டு அவ்வீட்டில் வந்து பொங்கித்ததும்பும் பாடல்களை பாடிக்கொண்டிருப்பார்கள்.

அன்பர்களே காதலானது ஒருநாட்டிற்கு உரித்தானது இல்லையென்றோ, அல்லது உயர்நோக்கமும் நல்லொழுக்கமும் இல்லை என்றோ கூறமுடியாது. உலகில் இன்றுகாறும் சான்றோர் பலராலும் 'காதல் வேண்டும்; இன்றேல் சாதல்வேண்டும்' எனவும் கூறப்பட்டிருக்கின்றது. என் பார்வையில் ஆண்களுக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு பெண்களுக்கும் உண்டு ஆயின் பெண்களுக்குச் சிறந்த வேலையொன்றுண்டு. அஃதியாதெனில் பிள்ளைகளைப் பேணலாகும். இதுவே என் கொள்கையுமாகும். மணம் பண்ணினவர்கள் கணவனும் மனைவியும் அன்போடு வாழ முயற்சி செய்யுங்கள். தாங்கள் வாழ்வதற்கே பெண்களை மணம் பண்ணினேம் என ஆடவர்கள் நினைப்பார்களேயானுல் அதைவிட பெரும் பிழையானதும் முட்டாள் தனமுமான செய்கை கிடையாது. எவனொருவன் தன் காதலிக்கு தன்னுலியன்ற மகிழ்ச்சியைக் கொடுக்கின்றானே, கொடுக்க விரும்புகின்றானே அவனே உண்மையான மணத்தின் தன்மையை அடைகின்றான். அதுபோலவே ஒவ்வொரு பெண்ணும் தன் கணவனுக்கு எவ்வளவு மகிழ்ச்சியைக் கொடுக்க முடியுமோ அதில் கண்ணும் கருத்துமாயிருத்தல் வேண்டும்.

### இங்கர்சாலின் பொன்னுரைகள்.


நோயற்றவாழ்வேசுகவாழ்வு.

எல்லாவித செல்வங்கள் இருந்தும் நோயினுல் துன்பப்பட்டால் மனித வாழ்வு துன்பமயமாகவே தோன்றும்.

இதற்கு வழி என்ன?

மனிதர் தலைமுதல் கால் வரையில் எவரும் எவ்வித வியாதியையும் போக்கி, நிகரற்ற தேகசுகத்தைத் தரக் கூடியதும், தேவாமிர்தம் பான்றதென பல்லாயிரக் கணக்கான ஜனங்களால் புகழப்படும்

மின்சாரரசம்

ஒரு பாட்டில்
ஒரு குடும்பத்திற்கு இருந்தால் போதுமானது.
சௌக்கியமாக
சகல சுக போகங்களுடன் வாழலாம்.

புட்டி 1-க்கு ரூ. 2. தபாற் சார்ஜ் வேறு. கேட்லாக் இனம்.

விலாசம்:—
மின்சார ரசம் கம்பெனி (லிமிடெட்) சேலம்.

செட்டிமார் நாட்டில் நமது முக்கிய வியாபாரிகள்:—

மெஸர்ஸ் A. V. & சன்ஸ்,
காரைக்குடி.

(1)



சிமிண்டு தளக் கற்கள்.
Cement Vitrified Tiles.

புது மாதிரிகள்! ஏராளமான ஸ்டாக்கு

மிகவும் உறுதியானது. பார்க்க நேர்த்தியானது. தேயாதது நடக்க நடக்க பாலிஷ் ஏறக்கூடியது. பல கலர்களிலும், பூவேலைகள் செய்த பல டிஸைன்களிலும், பல அளவுகளில் ஸப்ளை செய்யப்படும்.

ராவல் அண்டு கம்பெனி,
காரைக்குடி.

1 (3)


---

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.
S. C. No 969 of 29.

காரைக்குடி H. கெங்காராம் பவர்ஏஜண்டு P. நடேச முதலியார் } வாதி.

P. K. R. A. ராமன் செட்டியார் ... ... } பிரதிவாதி

வாதிகடையில் பிரதிவாதி பத்து வழி செய்தவகையில் கொடுக்கவேண்டிய ரூபாய் 176-12-0-க்கு பிராது செய்து 3-6-30 தேதி வாய்தா ஏற்பட்டிருக்கிறவிபரம் தெரியச்செய்திருக்கிறது.

T. R. Parthasarathi Iyengar
17—4—30 வாதிவக்கீல்

## காவடியெடுத்தாடுதல்

மகிபாலன்பட்டி திரு. மு. சின்னையா செட்டியார் எழுதுவது.

• இந்துக்களாகிய நாம் தொன்று தொட்டுத் தெய்வப் பிரீதியாகப் பாற்காவடி, சர்ப்பக்காவடி, மச்சக்காவடி, இளநீர்க் காவடி முதலியவற்றில் ஒன்றையெடுப்பதாகப்பிரார்த்தனைசெய்து கொண்டு அதற்காக விரதம் இருந்து சரீரத்தையும் மனதையும் பரிசுத்தப் படுத்திக்கொண்டு குறித்த நாளில் பயபக்தியோடு காவடியெடுத்துக்கால் நடையாகக் குறித்த தலத்திற்குச் சென்று ஆலயஞ்சுற்றி ஆடிப்பாடி வந்து செலுத்துவது வழக்கமாக வைத்திருக்கின்றோம். ஒருவாறாக இதற்கு ஒரு விசேஷமுண்டென்று இங்கு (இந்தியாவில்) மதிக்கப்படுகிறது. ஆனால் அதே காரியத்தை அதன் விசேடத்தை யறியாத மக்கள் வாழும் அன்னிய நாடுகளிற் செய்யும்போது தற்கால நாகரிகத்திற்கு ஒத்ததாகயில்லாததினால் பரிகசிக்கப் படுகிறது. அன்னிய நாட்டு ஆங்கிலப் பத்திரிகைகளையும், பிரஞ்சுப் பத்திரிகைகளையும் பார்த்தவர்கள் இதை நன்கறிவார்கள். நம்மவர் பொருளீட்டச் சென்றிருக்கும் (இந்தோ சீனம்) Indo-china விலும், மலாய் ஸ்டேட்டிலும் பர்மாவிலும் சிலோனிலும் உள்ள பல ஊர்களில் தண்டாயுதபாணி கோயில்களிருக்கின்றன. அந்த தைப்பூசத்திலும் பங்குனி உத்திரத்திலும் சித்திரா பௌர்ணமியிலும் உற்சவம் நடத்தி அப்போது காவடி எடுப்பதும் வழக்கமாயிருக்கிறது. காவடிகளை வீட்டிலிருந்து கட்டி வீதிவழியாக எடுத்து ஆடிப்பாடிக் கொண்டு போவதும் அந்த ஆட்டபாட்டமும் அன்னிய நாடுகளிற் பொருத்தமாக இல்லாததினால் நகைப்பக்கிடமாகவேயிருக்கின்றதென்பதை நம்மவர் தெரிந்து கொள்ள வேண்டும். பொதுவாக சரீரத்தையே முழுதும் மூடாமல் அரைகுறையாக ஆடையணிந்து கொள்ளுவதையே அன்னிய நாட்டினர் விரும்பாமல் விகாரமாகக்கருதுகின்றனர் என்பது பலரும் உணர்ந்திருக்கலாம். அப்படியிருக்க விசேட நாளில் நல்ல ஆடைகளை நாகரிகமாயணிந்து அலங்காரமாகச் செல்லாமல் ஆடியலைந்து அலங்கோலமாகச் செல்வதை எப்படி மதிப்பார்களென்பதை யோசித்துப் பாருங்கள்.

"தேசத்தோடொத்துவாழ்" என்ற முதியோர் கட்டளைப்படி எந்த தேசத்தில் எது நாகரிகமென்று கருதப்படுகிறதோ அதைக் கொண்டும் எது அநாகரிகமென்று கருதப்படுகிறதோ அதைத்தள்ளியும் நடக்க வேண்டும்; அதுதான் பெருமைதருவதாகும். அம்முன்னை தேயத்தில் கௌபீனந்தரித்தவன் பைத்தியக்காரன் என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். நாம் தெய்வப்பிரீதி என்று செய்தாலும் அந்த அருமையை அறியாத மக்கள் வாழும் நாட்டில் பரிகசிக்கப்படுவதை உணர வேண்டும். நகைத்தால் என்ன, பழித்தாலென்ன என்று கடந்து பேசுவதற்கு நாம் துறவிகளல்ல. அத்தகைய மனத்தூய்மையும் நமக்கில்லை. மேலும் நமது தொழிலுக்கு நாம் பிறரால்மதிக்கப்பெற்றிருக்க வேண்டுமென்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ஆகவே நமது தாய் நாட்டை விடுத்து அன்னிய நாடுகளிற் காவடி எடுத்தாடுவதை அறவே விட்டு விடுதல் நலம். ஒரு சமயம் பக்தர்களின் மனம் அப்படிச் செய்ய இன்னமும் இடந்தரா விட்டால் காவடிகளை வெளியிற் கொண்டுவந்து பக்தியைச் செலுத்துவதே போதும். காலதேச வர்த்தமானத்தை அனுசரித்து நாம் வழிபடு கடவுளும் அதையேற்றுக் கொள்ளுவாரென்று உறுதிகூறுகிறேன்.

——

## நோட்டீஸ்.

தேவகோட்டை

டி. மு. கோர்ட்டு.

S. C. No. 799 of 1929.

சி. பள. வீர. மெய்யப்ப செட்டியார் } வாதி

செ. ராம சு. நா. சுப்பிரமணியன் செட்டியார் } பிரதிவாதி

வாதியால் பிரதிவாதிபேரில் ஷியாரால் எழுதிக் கொடுக்கப்பட்டிருக்கிற பிராமிசரி நோட்டின்படி ரூ 276-9-6 க்கு ஷிநம்பரில் தாவா செய்யப்பட்டு 3–6–1930-ல் வாயிதாவேற்பட்டிருக்கிறது. அதில் பிரதிவாதிக்கு ஏதாவது ஆக்ஷேபணையிருந்தால் ஷி வாயிதாவில் தெரிவித்துக்கொள்ள வேண்டியது.

வி. ராமஸ்வாமி ஐயர்,

தேவகோட்டை } 18–4–30 } வாதி வக்கீல்.

——


## கணித ஜோதிடம்.

பரிசுத்த கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னாரென்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம் அருமையான பூர்வீக ஜோதிடநூற்கள் பலவுள்ளதால் நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள் பொதுப் பலன்களாயிராமல் விவரமாகவும் சாஸ்திரீகமாகவுமிருக்கும். உங்கள் ஜாதக நகலாவது கடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே ஆறுமுக.செட்டி,

முதலியார் பேட்டை, புதச்சேரி.

Medalists. Certificate Holders
சிமிண்டுபரப்பு சதுரக்கற்கள்.

பலவர்ணங்களினால்
தயாரிக்கப்படுகிறது.

உயர்ந்த சிமிண்டு, ரம்யமான டினுசுகள், உறுதியான கற்கள், சரசமான விலைகள்.

மற்றும் சிமிண்டினால் தகட்டுக்கற்களும், ஹாவுர்ன்தார்சு கற்களும், குழாய்டினுசுகளும், பூந்தொட்டிகளும் தோட்டக்கிருதிகளும்

கிடைக்குமிடம்:—

லெக்ஷ்மி டைல் ஓர்க்ஸ்,

(14) புதுக்கோட்டை.

## ஆருடத்தின் மகிமை.

எதிர்காலத்தைப்பற்றிய 5 கேள்விகளுக்குப் பதில் எழுத ரூ. 1. மேல் ஒவ்வொரு கேள்விக்கும் அணா 4. கடிதம் எழுதும் போதன்ன நேரத்தை குறிப்பிடவும்.

வி. கே. சடகோபச்சாரியார்.

(27) திருத்தணி, இந்தியா.

## மூன்று தேதி காலண்டர்.

பர்மா, தமிழ், ஆங்கிலம் ஆகிய மூன்று தேதியுள்ள அழகிய காலெண்டர்.

இவ்வருட மூன்று விதமான அழகிய "குமரன்" "கண்ணன்" "உமாபதி" படங்களிட்ட காலெண்டர் வெளியிட்டிருக்கிறோம்.

24) விலை அணா எட்டு

RM. S. RM. Chellappa Chettiar,
Stationers & Perfumers 123, Mogul (St) Rangoon.

A PERFECT BUST

பெண்களுக்கு அழகு எது?

"ROBUSTOL" வைத்திய உலகிற்கே புத்தப் புதிது.

இவ் ஔடதத்தை உபயோகிக்கும் ஒவ்வொரு பெண்மணிக்கும் அழகிய நல்ல மார்பை அளிப்பது. மகளிர் ஒவ்வொருவரின் முதற் கடமை அழகும் கனிகலனுமிய தம் மார்பைப் பாதுகாப்பதேயாகும். இவ் வசீகரமான புது முறை பெண்களின் சிறிதாயுள்ள மார்பைப் பெருத்து விம்மச்செய்யும். வசீகரமற்ற மார்புடைய பெண்கள் வியப்புறுமாறு சிறிது நேரத்தில் அழகுவாய்ந்த மங்கையராய் மாறுகின்றனர். ஒரு மாதத்தில் 5000 புட்டிகளுக்குமேல் விற்றுவிட்டன. அதன் அதிசய குணங்களைக் கண்டு மருத்துவர்களும் மயங்குகின்றனர்.

இன்றே ஒரு புட்டியை வரவழைக்கவும். கடிதங்கள் ரகசியமாக வைத்துக் கொள்ளப்படும். முழுவிலாசத்தை தெளிவாக எழுதவும். விலை ரூ 4—0—0தான் தபால் செலவு வேறு. அயல்நாட்டுக்கு அட்வான்ஸ் ரூ. 6-0-0 வி. பி. கிடையாது விலாசம்:

Mons V. PADMA. Kalyan Niwas Building. Post No. 19 BOMBAY.

அதிக லாபம்பெற விரும்பினால் குமரனில் விளம்பரம் செய்யுங்கள்.

K. நாகலிங்கம் & பிரதர்ஸ்,

எலக்டிரிக் வயரிங் கண்டிராக்டர்ஸ்.

41 கீழ ஆவணி மூலவீதி,

மதுரை.

தங்கள் வீடு, பங்களா, முதலியவைகளுக்கு எலக்டிரிக் வயரிங் போடுமுன் எங்களிடம் கலந்து கொள்ளுங்கள். நாங்கள் இத்தொழிலில் நீண்டநாள் அனுபவம் வாய்ந்தவர்கள், தங்கட்கு குறைந்த விகிதத்தில் குறிப்பிட்ட காலத்தில் திருப்திகரமாக உத்திரவாதத்துடன் செய்து கொடுப்போம். எனவே ஒரு முறை எங்களிடம் ஆர்டர் கொடுத்துப் பார்க்கவும். வெளியூர் ஆர்டர்களை மிக்க கவனத்துடன் தேர்ச்சிபெற்ற ஆட்களைக் கொண்டு செய்து கொடுப்போம்.

சகலவித எலக்டிரிக் சாமான்கள் குறைந்த விலைக்கு எங்களிடம் கிடைக்கும். விபரத்திற்கு மேற்கண்ட விலாசத்துக்கு எழுதவும். (26)

சுதேச கைத்தொழிலை ஆதரியுங்கள்.

இந்தியரால் இந்திய கைத்தறியில் செய்யப்பட்டது.

பெனாரஸ் பட்டுப் புடவை.

நேர்த்தியான உடை, அழகான சிறு ஜரிகை கரை, ஜரிகை முகதலை. தினப்படி துவைத்துக்கட்ட சிலாக்கியமானது. நாகரீகத்தை விரும்பும் ஸ்திரீகளுக்கு இது மிகுந்தசந்தோஷத்தைக் கொடுக்குமென்பதில் தடையில்லை. சொற்பச்சேலைகளே கைவசமிருக்கின்றன. உடனே எழுதுங்கள் கண்ணைக்கவரும் பலவித இங்கிலீஷ் கலர்களிலும் கிடைக்கும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 12 முழம் | x 44 | புடவை | 1-க்கு | விலை ரூ. 28/– |
| 16 முழம் | x 44 | ,, | 1-க்கு | விலை ரூ. 38/– |
| 18 முழம் | x 44 | ,, | 1-க்கு | விலை ரூ. 45/– |

பெரிய கேட்லாக் இனாம்.

கே. எஸ். முத்தையா கம்பெனி,

சில்க் ஹவுஸ் ஸ்ரீ காசி.

☞ இந்தப் பத்திரிகையைக் குறிப்பிட்டு ஆர்டர் கொடுப்போருக்கு நம் இந்தியத் தலைவர்களின் படங்கள் 4 இனாமாய் அனுப்பப்படும்.

(47) K. S. Muthiah & Co, Benares

## தாதுபுஷ்டியில் மன்மதனுக்கு ஒப்பாவீர்கள்.

நீங்கள் என்றுமழியாத இளமைப்பருவத்தை அடைய வேண்டுமானல் பழனி, ஆர். எம். கே.

# தங்கபஸ்பம்

## நாசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்.

### தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமே இல்லே.

இது பிரபுக்கள் சாப்பிடவேண்டிய மருந்து. மற்றவர்கள் சாப்பிட்டு தாங்கமுடியாது.

ஒரே வேளையில் கொடுக்கும் பலனைப்பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவாச்செய்து விடுகிறது.

### தாதுபுஷ்டியில் மன்மதனேவென மயங்குவார்கள்.

இதிலமைந்திருக்கும் ஓர்ரகசியம் அபூர்வசக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலே மாலே கொய்பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சீக்கிரத்தில் தாதைக் கட்டி வீரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பிவரும்படி செய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பது மகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டாவென்று பிரமிக்கச் செய்கிறது, தாதைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக்கொடுத்து பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் இந்தப்பருவங்களில் அடைய வேண்டிய காலத்திற்குமுன் அடைந்த விபரீதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமை படையச் செய்வதில் பேர்பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், காசம், க்ஷயம், ஈளை, இருமல், கஷ்டசுவாசம், கோழை, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகலவித காமவியாதிகளும் தீரும். தளர்ந்து போன நாம்புகளுக்கு முறுக்கேற்றும், வீரியத்தைக் கெட்டிப்படுத்தி ஆண்மைக்குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்குமிஞ்சின ஔஷதமில்லே. 100-நாளைக்கு தங்கபஸ்பமும் நாசிங்க லேகியமும் ரூபாய் 100. 50 நாளைக்கு ரூபாய் 50, 25 நாளைக்கு ரூபாய் 25. சிங்கப்பூர் வாசிகள் சார்ஜு ரூபா 2-ம் சேர்த்து முன்பணம் அனுப்பவேண்டும்.

### நற்சாக்ஷி.

நான் உட்லேண்டு ஸ்டேஷன் மாஸ்டர் மூலமாய் தங்களிடமிருந்து நாசிங்க லேகியமும், தங்க பஸ்பமும் வாங்கி சாப்பிட்டதில் இப்போது புதிய பலம் அடைந்திருக்கிறேன்.

S. Jesudasan, Railway Overseer, Woodlands, Singapore.

### புத்திர சந்தானம் உண்டாகிவிட்டது.

நற்சாக்ஷி:—எனக்கு விவாகம் நடந்து ஆறுவருடம் வரை புத்திரசந்தானமில்லாமலிருந்தது. தங்கள் தங்க பஸ்பமும், நாசிங்க லேகியமும் தருவித்து 25-நாட்கள் சாப்பிட்டதில் என் குறைகள் பூராவும் தீர்ந்து புத்திர சந்தான முண்டாகிவிட்டது. இந்த உண்மையை உலகத்தாருக்கு எடுத்தோத முன்வந்திருக்கிறேன். இம்மருந்துகள் தேவ ஔஷதங்கள் என்று சொல்வது மிகையாகாது. சரீர திடத்தையோ, புத்திக்கூர்மையோ, மன மகிழ்ச்சியையோ, மேலாய புத்திரப்பேற்றையோ விரும்பும் ஒவ்வொருவரும் இம்மருந்துகளை வாங்கிச் சாப்பிட்டால் நினைத்தது லபிக்குமென்பதே எமது துணிபு. தாங்கள் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ எல்லாம் வல்லபிரான் இன்னருள் புரிவாராக.

(Sd) நல்லதம்பி, கட்டுப்பட்டை, சிலோன், 22-2-27.

### ஒரு அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்

1—9—24-ல் கோலாசெலங்கர் டிஸ்டிரிக்ட் ஹாஸ்பிட்டல் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் நமது தங்க பஸ்பத்தைப் பற்றி புகழ்வதைக் கவனியுங்கள்:- அன்பார்ந்த வைத்தியஆசிரியர் ஆர். எம. கே. வேலுசாமிபிள்ளை அவர்களுக்கு, அதிக பக்தியுடன் எழுதுவது யாதெனில், தங்கபஸ்பமும், நாசிங்கலேகியமும் இரு நோயாளருக்கு 50-நாட்களுக்கு கொடுக்கப்பட்டது. இருவரும் தங்கள் குறைகள் நீங்கி சவுக்கியத்துடனிருக்கிறார்கள். தாங்கள் அருமையாகச் செய்த பஸ்பமும், லேகியமும் யாவராலும் கொண்டாடத்தக்கதே. இன்னும் 100-நாள் தங்கபஸ்பமும சாலாமிசிரி அல்வாவும் ரூ 50-க்கு வி. பி. செய்யவும்.

P. Nagalingam Hospital C/o District, Hospital, Kualaselengor.

# தாதுபுஷ்டிக்கு

## தங்கபஸ்பம் மகாமன்மத காமகேசரி

## சாலாமிசிரி அல்வா.

### இழந்துபோன ஆண்மையைத் திரும்பக் கொடுக்கும் இல்லற வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து தாது புஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லே.

மேகரோகம் கொடிய வியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி சரீரதிடம், அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும், காமகேசரி அல்வாவும், தங்க பஸ்பமும் 100-நாள் மருந்து ரூபாய் 50. 50-நாளைக்கு ரூபாய் 25. 26-நாளைக்கு ரூபாய் 12—8—0

## கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை.

தாது புஷ்டிக்கு இதற்கீடு ஒன்றுமில்லே

பிரபுக்களுக்கு 100 குளிகை ரூபாய் 20. மற்றவர்களுக்கு 100 குளிகை ரூபாய் 10.

### ஒரு அஸிஸ்டென்டஸர்ஜன் புகழ்வதைக்கவனியுங்கள்.

தங்களின் அருமையும் பெருமையுமான தங்கபஸ்பமும் சாலாமிசிரிலேகியமும் எனது நோயாளி ஒருவருக்குக் கொடுத்தேன். அவரின் எத்தனையோ விதமான நோய்கள் பஞ்சுபோல் பறந்து போய்விட்டது. இப்போது அவர் நல்ல திடதேகியாயிருக்கிறார். ஆகையால் அடியிற்கண்ட மருந்துகளை அனுப்பவும். தாம்பா பஸ்பம் 80-வேளை ரூ 40. காளிசபத்திரி சூரணம் 40-வேளை ரூ 5. நாசிங்க லேகியம் தங்க பஸ்பம் ரூ 50. தபால் செலவு ரூ 2. ஆக ரூ 97-க்கு வி. பி. செய்யவும். 19—1—25

மகா-ள-ள-ஸ்ரீ வைத்திய ஆசிரியரவர்களுக்கு தங்கள் மருந்துகள்யாவும் நோயாளர் யாபேருக்கும் சுகத்தையும் மனத்திருப்தியையும் கொடுத்திருக்கின்றது. தங்கள் மருந்துகளின் அருமையையும் நான் அநேகருக்கு அனுபோக அத்தாக்ஷியுடன் எடுத்துக்காட்டியிருக்கிறேன். தங்கள் மருந்துகளுக்கு சர்டிபிகேட் தேவையில்லே. மருந்துகள் தாமே தங்கள் பெயரை எங்கும் விளங்கச்செய்கின்றது. ஆகையால் தாம்பா பஸ்பம், நாசிங்க லேகியம், பவள பஸ்பம், தங்கபஸ்பம் இவைகளை வி. பி. செய்யவும் (ரூ 238-0-0-க்கு) வி. பி. பார்சலில் அனுப்பியிருக்கிறது.

P. Nagalingam Hospital, C/o District Hospital, Kualaselengor

### நற்சாக்ஷி:

### புத்திர சந்தானம் உண்டாகிவிட்டது.

ஐயா, எனது நண்பர்களில் ஒருவர் ஆண் சந்ததி சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார். அநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல்பூச்சுமருந்துகள் உபயோகித்தும், அநேக மருந்துகள் சாப்பிட்டும், கொஞ்சம்கூட குணமாகவில்லே. தங்கள் மேன்மைபொருந்தியதும், உயர்ந்த பலனைக் கொடுக்கக்கூடியதும், மதிக்க முடியாததுமான தங்கபஸ்பம, மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50-நாள் மருந்தும், கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100-ம் தருவித்து 15-நாள் சாப்பிட்டதில் பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும், 10 மடங்கு ஆண்மையையும் கொடுத்துவிட்டது. மேற்படி வியாதியஸ்தர் பூராமருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூராவையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிறார். தங்கள் ஞாபக சின்னமாக மேற்படி குழந்தைக்கு "வேலுசாமி" என்கிற தங்கள் நாமத்தையே சூட்டி அழைத்து வருகிறார்.

10-1-29 V. S. NATANAM, Sub inspector of Police, South Arcot Dt.

## வைத்திய ஆசிரியர்:

# ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை

தந்திவிலாசம்: 'வேலுசாமி' பழனி. சித்தவைத்தியசாலை, பழனி. S. I. Ry.

(2)




நீங்கள் அடையத்தகுந்த மைல் விகிதத்தை தரவும், கொடுத்த பணத்திற்கு பூரா கைம்மாறையும் உங்கட்கு அளிக்க, உங்கள் டயர் ரிப்பேர்களைப் பழுது பார்க்க, வல்க்கனைசிங் செய்யும் ஸ்தாபனங்களை ஏற்படுத்தியிருக்கிறோம்.

குட்ஈயர் தொழிற்சாலைகளில் உபயோகப்படுத்தப்படும் உபகரணங்கள் முறைகள், சாமான்கள் முதலியவைகளைப்போலவே ஷை ஸ்தாபனங்களிலும் ஏற்படுத்தப் பெற்றிருக்கின்றன.

சக்கிரங்களை வைத்துக் கொள்ள வேண்டிய முறை, சரியானபடி காற்று இருக்கவேண்டிய நிலைமை முதலியவைகள் போன்ற வேண்டிய தேவைகளை அளிக்க நன்கு பயிற்றுவிக்கப் பெற்ற தேர்ந்த வேலையாளர்களும் எளிதில் கிடைப்பார்கள்.

GOOD YEAR

(பத்திராதிபர்) சொ. முருகப்பனால் காரைக்குடி, குமரன் பவர் அச்சுக்கூடத்தில் பதிப்பித்து, பிரசுரிக்கப்பட்டது.

